# ஓர் பவழமல்லியின் பிரார்த்தனைகள்

**எஸ். வேம்பு,** எம்.ஏ., எம்.எட்.,
(ஓய்வு பெற்ற தலைமையாசிரியர்)

செல்வி எஸ்.வி.
விச்வகமல் அபார்ட்மெண்ட்ஸ்
எண் 245/15, இராமகிருஷ்ண மடம் சாலை
மயிலாப்பூர், சென்னை - 600 004
போன்: (044) 24935780

ஓர் பவழமல்லியின் பிரார்த்தனைகள்
எஸ். வேம்பு

உரிமை: ஆசிரியருக்கு

முதலாம் பதிப்பு

விலை: அங்காடி செல்லா நோன்பு - இச்
சங்கீத அரும்புகளுக்கு!

ஓவியம்: ஆசிரியர்

Printed at
Jai Ganesh Offset Printers
Chennai 600 004. Ph: 24934335

# அணிந்துரை

**எ**ண்ணற்ற பிறவிகளுக்குப் பிறகு வருகின்ற அரிய பிறவிதான் மனிதப் பிறவி. எனவேதான் தமிழ்நாட்டின் தலை சிறந்த ஞானமணியாக விளங்கிய ஔவையார் ''அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது'' என்று எடுத்துரைத்துள்ளார். மனிதப் பிறவியின் மூலமாகத்தான் மீண்டும் பிறவாத பேரின்ப பெருவாழ்வாகிய முக்தியைப் பெற முடியும்.

எல்லாம் வல்ல எம்பெருமானோடு நாம் கலந்து கரைந்தால் தான் முக்தி நிலை நமக்குக் கிட்டும். திருமாலினுடைய பத்து அவதாரங்களில், ஒருத்தி மகனாய்ப் பிறந்து இன்னொருத்தி மகனாய் வளர்ந்த கண்ணபிரான் அவதாரம் எல்லோரும் ஏற்றுப் போற்றக் கூடிய அற்புதமான அவதாரமாகும்.

பகவான் கண்ணன் என்னும் பக்திக் கடலில் மூழ்கி அருள் என்னும் அரிய முத்துக்களை எடுத்து அழகான இசை மாலை யாகத் தொடுத்துத் தந்துள்ளார் எஸ். வேம்பு அவர்கள். பலவித இராகங்களில் பல்லவி, அநுபல்லவி, சரணம் ஆகியவற்றின் அடிப்படையில் இசைப் பாடல்களை எழுதி அவற்றை ஒரு நூலாகத் தொகுத்து அவர் வழங்கியுள்ளார்.

அழகன் கண்ணன்தான் பிறவிப் பிணியினைத் தீர்த்தருளும் பெருமான் என்பதை அறிந்து கொண்டு, அவரிடம் வேண்டித் தொழுகின்ற பாங்கு அவருடைய ஆன்மீக தாகத்தை நன்கு புலப்படுத்துகின்றது.

''பற்றினைப் பாசத்தை - உன்
பாத கமலத்தில வைக்கும்
பக்குவம் ஒன்றினை
பரமனே நீ அருள்.''

என்று ஆசிரியர் வேண்டுகின்றார்.

நம்முடைய குற்றம் குறைகள் எல்லாம் நீங்கி இறைவ னுடைய திருவருளுக்கு ஆளாக வேண்டுமானால் என்ன செய்ய

வேண்டும் என்பதைக் கீழ்க்கண்ட வரிகளின் வாயிலாய் ஆசிரியர் வேம்பு அவர்கள் வலியுறத்துகின்றார்.

''நாத உபாசனை செய்வோம் நாளெல்லாம்
கோதெல்லாம் அகல உயிர் உருகியே நாம்!''

ஸ்ரீ சக்கரத்தின் பெருமையைப் பற்றிப் பாடும்போது,

''சிவம் எனும் அன்பே ஸ்ரீசக்கரம்!
சின்மய ரூபமே ஸ்ரீசக்கரம்!
பவவினை தீர்க்கும் ஸ்ரீசக்கரம்!
பணிந்திடுவோம் ஸ்ரீ சக்கரம்''

என்று குறிப்பிட்டுள்ளார்.

எதற்கும் அசையாத இரும்புகூட நெருப்பைக் கண்டதும் நெளிந்து கொடுக்கிறது. அதுபோல மனமெனும் பெரும் பாறையை உருகவைக்கக் கூடிய ஆற்றல் பெற்றது இசை.

''அருமருந்து நல்ல
சங்கீதம் என்றும்;
ஆத்ம சுகம் தந்து
ஆற்றும் எந்நோயையும்''

என்ற பாடல் வரிகள் இசையின் மாண்பினை எடுத்துரைக்கின்றன.

''பிரார்த்தனை என்பது ஆத்மாவில் பூக்கும்
பக்தி மணம் கமழ் பவழ மல்லிகை''

என்று ஆசிரியரின் அனுபவம் பேசுகிறது.

உயிரோடு இருப்பது என்பது வாழ்வாகாது என்ற நுண்ணிய கருத்தை,

''உயிர் தரித்தால் போதுமோ — உலகில்
உன்னதமாய் வாழ வேண்டாமோ நீ?''

என்று வினவுவதன் மூலம் வெளிப்படுத்துகின்றார்.

வாழ்க்கையின் மறுபெயர் நம்பிக்கை. அதுதான் நம்மை வளர்த்து உயர்த்துகிறது.

''பல துளி பெருவெள்ளம் என்பதே கூற்று!
பற்றிடும் நம்பிக்கை சக்தியின் ஊற்று!
பலமுறை வீழ்ச்சியும் பையநிகழ் ஏற்றமே!
ஐயமில்லா முயற்சியில் எய்துவோம் வெற்றியே!''

என்று பாடலாசிரியர் எடுத்துரைக்கின்றார்.

ஆஞ்சநேயரை அனுதினமும் ஆழ நினைந்துருகி அஞ்சலி செய்தால்

''நெஞ்சில் பயம் நீங்கும்; நேர்மைத் திறம் ஓங்கும்;
வஞ்சனை தீதணுகா வாழ்க்கைத் தடம் அமையும்''

என்று சொல்லுகின்றார்.

சற்குரு நாதர்களையும், பல கடவுளரையும், வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுக வேண்டிய முக்கிய அடிப்படைப் பண்பு களையும் மையமாக வைத்து பல இசைப் பாடல்களை எல் லோர்க்கும் புரியும் வகையில் எளிமையாக எழுதியுள்ள ஆசிரி யரின் முயற்சி பாராட்டுக்குரியது.

போலியும், பொய்மையும் தலைவிரித்து ஆடிக் கொண் டிருக்கின்ற இந்தக் காலகட்டத்தில் இது போன்ற பக்திப் பனுவல் மக்களுக்கு தெய்வ பக்தியையும் நன்னெறியையும் ஊட்டும் என்பதில் ஐயமில்லை. இயல், இசை ஆகிய இரு துறைகளி லும் ஆசிரியருக்கு உள்ள இயல்பான ஈடுபாட்டை இவ்விசைப் பாடல்களின் வழியே நாம் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடி கிறது.

நரதுதி செய்து வாழ்க்கையை வீணாக்காமல், பரதுதி செய்து வாழ்க்கைப் பயனை எய்துவதற்கு இந்நூல் உதவுமென்று நம்பு கின்றேன்.

திருமுல்லைவாயில்
19.03.2011

**சக்தி சீனிவாசன்**
இயக்குனர், அகில இந்திய
வானொலி நிலையம், சென்னை

# ஆசிரியர் உரை

பூத்ததும் புவி வீழும் பவழ மல்லிகை பூரணனைச் சரணடைந்து, ஆழப் பிரார்த்திக்கும் போலும், அனைத்து உயிருக்கும் உலகுக்கும் நலமருளக் கேட்டு!

உற்றுக் கேட்ட போதெல்லாம் அவை செய்யும் பிரார்த் தனைகள் என் செவி வீழ்ந்தன, சந்தக் கவி நடையில் சங்கீதச் சரங்களாய்! எழுத்தில் வடித்துக் கொடுத்துள்ளேன் அவை களை இசை நூலாய்.

என் இஷ்ட தெய்வம் கண்ணன் முதற் பகுதியிலும், எல்லாத் தெய்வங்களும் இரண்டாம் பகுதியிலும், இச்சக நலம் மூன்றாம் பகுதியிலும் இடம் பெற்றுள்ளன இந்நூலில்.

எந்த இராகங்களில் பாடல்கள் உதித்தனவோ அவையே பெரும்பாலும் குறிப்பிடப்பட்டுள்ளன; எனினும், அர்த்த பாவத்திற்கு ஏற்றாற்போல் வேறு இராகங்களிலும் பாடலாம். இராகமாலிகைக்கு உகந்தனவும், நடனத்திற்கு ஏற்றனவும் பல பாடல்கள் உள்ளன.

பக்திக் கடல் மூழ்கி, அருள் முத்தெடுத்து அழகு மிளிர் இசை மாலையாகத் தொடுத்த நூல் எனவும், இத்தகைய நூல் மக்களுக்கு நன்னெறியையும், தெய்வ பக்தியையும் ஊட்டும் என்பதில் ஐயமில்லை எனவும் உயர்வாகக் கூறி, பாடல்களின் எளிமையைக் குறிப்பிட்டு, எனது முயற்சியினைப் பாராட்டி, நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ளார் சென்னை, அகில இந்திய வானொலி நிலைய இயக்குனரான பெருமதிப்பிற்குரிய திரு. சக்தி சீனிவாசன் அவர்கள். மகிழ்ச்சியுடன் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன் அவர்களுக்கு.

இசைப்பாடல்களின் எழில் நலம் பாராட்டி ஊக்குவித்த துடன், பாடல் வரிகளைக் கவனமுடன் நோக்கிச் சரிபார்த்து உதவிய தமிழ்ப் புலமை மிக்க எனது உடன் பிறவாச் சகோதரி திருமதி கே. சுந்தரி சுந்தரம் அவர்களுக்கும் எனது நன்றி.

பாடல்களுக்கு நூல் வடிவம் கொடுக்கும் முயற்சியாய் பேரன்புக்குரிய அல்லயன்ஸ் திரு. வி. ஸ்ரீனிவாசன் அவர்களை நான் அணுகியபோது, இத்துறையில் சிறந்த செயல்பாட்டுக் குரியவர் என எனக்கு அறிமுகப்படுத்தப்பட்டவர் ஜெய்கணேஷ் அச்சக உரிமையாளர் திரு. சி.என். ரவி அவர்கள். எதிர்பார்த்த படி நூலினை நன்முறையில் அச்சிட்டு வெளியிட அனைத்து உதவிகளையும் நல்கிய அன்பிற்குரிய திரு. சி.என். ரவி அவர் களுக்கு எனது மனமார்ந்த நன்றி.

என்றென்றும் உள்ளார்ந்த அன்போடு என்னை ஊக்கு வித்து, உதவிகள் பல நல்கி வரும் அல்லயன்ஸ் கம்பெனியார் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றி.

28.03.2011 எஸ். வேம்பு

# பொருளடக்கம்

## பகுதி I

### வழித் துணைக்கு வைகுந்தனையே உடனிருக்க அழைத்திருப்போம்!

## பகுதி II

### விழி பனிக்க ஏழிசையில்
### இறையருள் வேண்டி நிற்போம்!

## பகுதி III

### ஞால நலமே பேணி
### நன்னெறிகள் கடைபிடிப்போம்!



## கணபதியே வந்தருள்!

*இராகம்: சரஸ்வதி* *தாளம்: திரிபுடை*

இணையடியில் இதயம் வைத்தேன்
கணபதியே வந்தருள் - உன் (இணையடியில்)

அநுபல்லவி

பணிந்துன்னைப் பக்தியிலே உருகி
பரவச அமுதினைப் பருகிட நான் (இணையடியில்)

சரணம்

கருணை வெள்ளமென்பார் உன்னை,
கற்பகத் தருவென்பார் பாரோர்!
பிரணவ மெய்ப்பொருளே, நிறைவே!
அற்புத வடிவெடுத்தோய் நீ!
அரண் நீ! அபயம் தரும் தெய்வம் நீ!
ஐங்கரனே, உன்னைச் சரணடைந்தேன்! (இணையடியில்)



## நினைக்கவும்...

*இராகம்: ஹேமவதி* *தாளம்: ரூபகம்*

நினைக்கவும், கண் பனிக்கவும்
நீ அருள் கண்ணா! - உன்னை

அநுபல்லவி

கணக்கிலா நாம ரூபங்களிலும் நீ
இருக்கின்றாய் என அறிந்தே நான் (நினைக்கவும்)

சரணம்

வினை என விளைவென
முடிவில்லாத் தொடர்களை
வேடிக்கையாய்ச் செய்யும்
விளையாட்டுப் பிள்ளை நீ!
தனிப்பெரும் கருணையாய்த்
திகழ் அருட்ஜோதி நீ!
தேடி அடைவதற்கே - உன்னைத்
திசை, வழி காட்ட வேண்டி (நினைக்கவும்)

# ஓர் வரமருள் கண்ணா!

*இராகம்: சிவரஞ்சனி* *தாளம்: ஆதி*

நெஞ்சிருக்கும் வரை உன்

நினைவிருக்கும் வண்ணம்

நீயே எனக்கோர்

வரமருள் கண்ணா!

**அநுபல்லவி**

சஞ்சல அலைகளே

சதிராடும் என் மனத்துள்

சாந்தம் நிலவ உன்

ஸ்மரணம் நிகழ அருள்! (நெஞ்சிருக்கும்)

**சரணம்**

கொஞ்சும் மழலையாய்

கோகுலத்தில் வந்துதித்தே

கோபியருடன் கூடி

லீலைகள் செய்தாய்;

ரஞ்சித அந்நிகழ்வெல்லாம்

ரசிக்க என் ஆயுள் முழுதும்

அஞ்சன வண்ணனே

அருள் தயவாய் நீ! (நெஞ்சிருக்கும்)

# அணி செய்கின்றேன்!

*இராகம்: இராகமாலிகை* *தாளம்: ஆதி*

பைந்தமிழ்ச் சோலையில் கொய்தெடுத்த வண்ணப்
பாமலர் உன் தாள் வைத்துப் பணிகின்றேன் கண்ணா!
**சிந்துபைரவி** எனும் தேமதுர இசையில்
ஆரங்களே தொடுத்து உனக்கு அணி செய்கின்றேன்! 1

செந்தமிழ்ச் சோலையில் சந்தமலர்ச் சொல்லெடுத்து,
**வசந்தபைரவியில்** சுகந்த மாலை தொடுத்து,
நந்தபாலனே! உனக்கணி செய்தே
வந்தருளக் கேட்டு வழிபடுகின்றேன்! 2

முத்தமிழ்ச் சோலையில் மொட்டுக்கவி பறித்து
மோஹனச் சரம் தொடுத்து **நடபைரவியில்**
பக்தவத்சலனே! உனக்கணி செய்தே
பார்த்தருளக் கேட்டுப் பிரார்த்திக்கின்றேன்! 3

தீந்தமிழ்ச் சோலையில் இன்னமுதச் சொல்லெடுத்து,
**ஆனந்த பைரவியில்** அழகொளிர் சரம் தொடுத்து,
வேணுவிலோலனே! உனக்கணி செய்தே
விரைந்தருள் செய்ய வேண்டிப் பணிகின்றேன்! 4

அமுதத் தமிழ்ச் சோலையில் ஆன்மீகச் சொல்லெடுத்து,
கமழும் மணமாலைகளும் கட்டி விட்டேன் **பைரவியில்;**
யமுனைத் துறைவனே! ஏற்றருள் செய்யவே
விழைந்தழைக்கின்றேன் வந்தருள்வாயோ நீ! 5



## வாராயோ!

*இராகம்: இராகமாலிகை* *தாளம்: ஆதி*

வா, வா என்றுன்னை
 வராளியில் நான் உருகி,
வருந்தி வருந்தி அழைக்க
 வாராயோ ஸ்ரீ. ஹரியே! - உளம்
ஓயாமல் நான் அழைக்க
 வாராயோ முரஹரியே! 1

கோபாலனாய் நினைத்துக்
 குந்தலவராளியில் நான்
கும்பிட்டுக் கூப்பிட்டால்
 வாராயோ ஸ்ரீ ஹரியே! - உன்னை
ஓயாமல் நான் அழைக்க
 வாராயோ முரஹரியே! 2

நந்தபாலனாய் எண்ணி
பந்துவராளியில் நான்
நாவாரப் பாடி அழைக்க
வாராயோ ஸ்ரீ ஹரியே! - உன்னை
ஓயாமல் நான் அழைக்க
வாராயோ முரஹரியே! 3

அந்தமில் அழகா! - சுப
பந்துவராளி இசைத்து
வந்தருள் என அழைக்க
வாராயோ ஸ்ரீ ஹரியே! - உன்னை
ஓயாமல் நான் அழைக்க
வாராயோ முரஹரியே! 4

பூரணனே உன்னை நான்
புன்னாகவராளியிலே
ஆராதனை செய்தழைக்க
வாராயோ ஸ்ரீ ஹரியே! - உன்னை
ஓயாமல் நான் அழைக்க
வாராயோ முரஹரியே! 5



## உடன் வர வேண்டும்!

*இராகம்: நடபைரவி* *தாளம்: ஆதி*



உடன் வர வேண்டும்
ஊதுகுழலோனே - என்
உயிர்ப் பயணங்கள்
யாவிலும் நீயே!

அநுபல்லவி

இடர்களெல்லாம் நீக்கி
ஏற்ற வழி காட்டி,
யதுகுலதிலகன் நீ
எனக்கருள் செய்யவே! (உடன்)

சரணம்

அடைக்கலம் என்று உன்
அடிமலரையே நினைந்து
அல்லும் பகலும் உன்னை
அழைத்திருக்கின்றேன்!
நெடுமால் நீயின்றி
எனக்கேது வேறு துணை,
நிர்ப்பயமாய் உலகில்
நெறி நின்றே வாழ! (உடன்)

# நீ மட்டுமே!

*இராகம்: ஸ்ரீரஞ்சனி* *தாளம்: ஆதி*

நீ மட்டுமே இருந்தால்
போதும், எப்போதும்
நிலையாய் என் அண்மையில்
நீல வண்ணா, கண்ணா!

அநுபல்லவி

ஊழ் பற்றிடும் தொடர்
வாழ்க்கைப் பிறவிகளில்
உறுதுணையாய் என் பக்கம்
உதவியே நின்றிட (நீ மட்டுமே)

சரணம்

படை முழுதும் பெற்றும்
பாரதப் போரினில்
படுதோல்வியே அடைந்தான்
துரியோதனன்;
அடைதற்கரிய ஒரே
உத்தமன் உன்னைப் பெற்ற
அர்ச்சுனனே அங்கு
வெற்றி பெற்றான்;
கடைநிலையில் வையம்
கலிமுற்றி வீழ்ந்தாலும்
கைவிடாதென்னை நீ
காத்தருள் செய்யவே (நீ மட்டுமே)

## அருள் நந்தலாலா!

*இராகம்: கானடா* *தாளம்: ரூபகம்*

ஏந்தும் என் உயிர் விளக்கின்
எரியும் நெய் தீர்ந்திடாமல்
பேரன்பின் ஊற்றுக்கண் - உளம்
பூக்க அருள் நந்தலாலா!



அநுபல்லவி

சாந்தி மேவ என் மனச்சோலையில்
சரமாய்ப் பாமலர்களும் அலர
வேணுவிலோலன் நீயே - அங்கு
வனமாலியாய் வந்தருள்வாய்! (ஏந்தும்)

சரணம்

ஓர்ந்தும் உணர்ந்தும் வாழ
உண்மை அனைத்தும் நீயென
காந்தன், கோவிந்தன் நீயே - நற்
கருணை செய்குவாய், நந்தலாலா!
நீந்திக் கரைசேர நான் - இஞ்
ஞாலப் பிறவிப் பெருங்கடலில்
நேயன் ஆரமுதன் நீயே - நின்
தாள்விரல் பிடியொன்றருள்வாய்! (ஏந்தும்)

# பக்குவமொன்றருள்

*இராகம்: வாசஸ்பதி* *தாளம்: ஆதி*

பயன் ஏதுமே கருதா
பணி செய்யவே, எனக்குப்
பக்குவமொன்றருள்
பார்த்தசாரதியே நீ!

அநுபல்லவி

இயன்றதெல்லாம் இடைவிடாது
செய்திருந்தாலும் நான்
உற்ற துணை உன் அருளின்றி
பற்றறுக்க இயலுமோ! (பயன்)

சரணம்

நரநாராயணனாய்
ஞாலம் நடந்தாய் அன்று,
அருமறை வேதங்களின்
சாரமே உபதேசித்து நீ;
கரம் குவித்தே பணிந்து
இறைஞ்சி நிற்கும் எனக்கும்
கருணைத் துளியொன்று
கிடைத்து உய்வேனோ நான்! (பயன்)

# இயம்பிட அருள்

*இராகம்: சிந்து பைரவி* *தாளம்: ரூபகம்*

எடுத்தே இயம்பிட அருள்

இசைத் தமிழில் நான்,

இறைவா, உன் புகழை

எப்பொழுதும் என் இயல்பாய்!

அநுபல்லவி

தொடுத்தே இருந்திட - நற்

தேனூறும் சொற்சரங்கள்

சுவர, ராக இனிமையில்

தோய்த்தே, சுவைத்தே! (எடுத்தே)

சரணம்

படுத்தே இருக்கின்ற

பரமன் ஸ்ரீரங்கனையும்,

பார்த்தனுக்குக் கீதை சொன்ன

சாரதி கண்ணனையும்,

விடுத்த அன்பழைப்பிற்கெல்லாம் - உடன்

வந்தருளும் விட்டலனையும்,

ஏற்றித் தொழுதிருக்கும்

வாழ்க்கையே நீ அருள்! (எடுத்தே)

## தியானம் அருள்

*இராகம்: பாகீஸ்வரி* *தாளம்: ஆதி*

இஷ்ட தெய்வமே! யதுகுலம் உதித்த
யாதவனே, ஹரி மாதவனே அருள்!

அநுபல்லவி

நிஷ்டையிலே அமரும்
நேரமெல்லாம் அலைந்தே
வட்டமிடும் என் மனத்தை
வசப்படுத்த வந்தருள்! (இஷ்ட)

சரணங்கள்

கட்டினேன் கோயிலொன்று
கற்பனையாய் என்னுள்
பற்பல அருட்தெய்வ
வடிவழகா, உனக்கே!
தொட்டு உன் தாள்பற்றி
தோத்திரங்கள் உரைத்து
எட்டிவிட முயல்கின்றேன்
ஏதும் எண்ணம் இல்லாநிலை! (இஷ்ட)

பற்றினைப் பாசத்தை - உன்
பாத கமலத்தில் வைக்கும்
பக்குவம் ஒன்றினை
பரமனே நீ அருள்!
முற்றிய பேரன்பில்
மோன நிலை எய்தி,
முக்தி வழி நடக்க
முராரியே நீ அருள்! (இஷ்ட)



## அழுது உருகியே

*இராகம்: ரஸிகப்ரியா* *தாளம்: ஆதி*

அழுது உருகியே இருந்துன்
　　அடிமலர் தொழுகின்றேன்;
ஆரா அமுதன் நீ
　　அருள்வாய் என நம்பி!

அநுபல்லவி

பழுதெல்லாம் நீங்கியே
　　பவித்திரமாய் ஆக நான்
பொழுதெல்லாம் உன் நாமம்
　　பஜித்திருக்கின்றேன்! (அழுது)

சரணங்கள்

விழுதென வேரோடும் - என்
　　விதி களையும் வழியறியா
உழலுகின்றேன் - வலிய
　　ஊழ்வினை வசமாகி;

மெழுகென அனலிடை

உருகுகின்றேன் நாளும்,

மொழிந்தே உன் நாமம் - உயிர்

மூச்சிழுக்கின்றேன்! (அழுது)

புரியாப் புதிர் எனினும்

இவ்வுயிரும் உலகும்,

ஹரிநாமமே உய்யும்

வழி என்றுணர்ந்தேன்;

முரளீதரா உன்னை

உறுதுணையாய் எண்ணி

சரணாகதி அடைந்தே

ஜபித்திருக்கின்றேன்! (அழுது)



# புனிதமாய் ஆக நான்!

*இராகம்: கல்யாண வசந்தம்* *தாளம்: ஆதி*

சுகந்தம் கமழ்ந்திடும் பூவின் புனிதம்
சுரந்திடவே என்னுள் அருள்வாய் கண்ணா!

அநுபல்லவி

முகுந்தன் நீ, கோபாலன், உன் ஆவின் புனிதம்
மலர்ந்திடவே என்னுள் அருள்வாய் கண்ணா! (சுகந்தம்)

சரணங்கள்

அகம் உறை ஆன்மச் சுடர் புனிதம்;
ஆலயமாய் விளங்கும் இடம் புனிதம்;
பகலவன் வெய்யிலின் பலம் புனிதம்;
பவித்திரமே என்னுள் புலர அருள் கண்ணா! (சுகந்தம்)

இமயம் பொழிந்திடும் இளகங்கைநீர் புனிதம்;
ஏழிசை மந்திர ஜப ஒலிகள் புனிதம்;
சமய சஞ்சீவியாய் உதவும் துளபம் புனிதம்;
சாத்திர ஆகமப் புனிதமே அருள் கண்ணா! (சுகந்தம்)

உகந்ததெல்லாம் எனக்கு ஈந்தருளும் தெய்வம் நீ!
ஓதும் நற்கீதை தந்த, என் உயிர்ச் சாரதி நீ!
அகந்தையின் ஆணிவேர் களைந்திடும் புனிதம்
ஆரா அமுதன் நீ, அருள்வாய் கண்ணா! (சுகந்தம்)

# என் உள்ளம்!

*இராகம்: பிருந்தாவனி* *தாளம்: ஆதி*



என் உள்ளம் ஓர் இருட்

கானகமாயினும், அங்கு

யாதவன் குழலூத - அது

பிருந்தாவனமே!

அநுபல்லவி

வண்ண மலர்களென

வாசனைகள் கமழ

எண்ணமெல்லாம் என்னுள்

உபாசனைகள் நிகழ்த்தும்! (என்)

சரணம்

என் நெஞ்சம் ஓர் போர்க்

களமாயினும், அதில்

கோவிந்தன் இரதமோட்ட - அது

குருக்ஷேத்திரமே!

கேட்கும் மொழியோசையெல்லாம்

கீதோபதேசமே - உயிர்

வேட்கையெல்லாம் தணிக்கும் - அது

வேதரச கல்பமே! (என்)



## உனக்கே

*இராகம்: சுபபந்துவராளி* *தாளம்: ஆதி*

கொய்திடும் பூக்களெல்லாம்

கோவிந்தா, உனக்கே!

குவலய வாழ்வெல்லாம் - உன்னைக்

கும்பிட்டுத் தொழுவதற்கே!

செய்திடும் செயலெல்லாம்

ஸ்ரீ ஹரி, உன் சேவைக்கே!

சுவரமொளிர் மாலைகள்

தொடுத்திருப்பேன் உனக்கே! **1**

தனித்திருக்கும் போதெல்லாம்

அழைத்திருப்பேன் துணைக்கே!

தாய், சேய் பல உறவில்

நினைத்திருப்பேன் இனிக்க!

பனித்திருந்தே விழிகள்

பக்தித் தழல் உருக்க,

பாலித்தருளக் கேட்டுப்

பதம் வீழ்ந்தேன், வணக்கம்!

# புனைகின்றேன்!

*இராகம்: மோகனம்* *தாளம்: ஆதி*

புனைகின்றேன் கவிதை அனவரதமும் நான்,
பூஜித்திருந்துன்னை புருஷோத்தமா, கண்ணா!

அநுபல்லவி

அணையா விளக்கென அன்புச் சுடர் ஏந்தி,
ஆரா அமுதனே, மனம் சோராதழைத்துன்னை
(புனைகின்றேன்)

சரணங்கள்

கானல் நீரெனக்
கலையும் கனவுகள்
ஆயிரம் ஆயிரம்
கண்டு புனைகின்றேன்;
வீணில் போகுமோ - அவை
வியர்த்தமும் ஆகுமோ,
வேய்ங்குழலோனே,
விழி மலர்ந்தருளாயோ! (புனைகின்றேன்)

பண்ணில் அமைந்த இசைப்
பாடல்களும் இராக
பாவங்களில் எந்தன்
தாபம் விளக்கமோ!
வண்ணா, உன் மனமிளகும்
வகையில் உரைக்குமோ
ஆவி தவிக்கும் - இவ்
வபலையின் நிலையை! (புனைகின்றேன்)

# தேடல்!

*இராகம்: ஆகிரிபைரவ்* *தாளம்: ஆதி*



தேடும் நிலையில்தான்
இருக்கின்றேன் என்றும்
திக்குத் திசை அறியாது,
தீங்குழலோன் கண்ணனை!

அநுபல்லவி

ஊடலும் கூடலும் - என்
உள்ளக் கற்பனையில்தான்;
ஊதுகுழலோன் நிழலும்
என் விழிகளுக்கெட்டாது (தேடும்)

சரணம்

காடு, கழனி எங்கும்
கண் அகல் வெளியெங்கும்
ஏடு தரும் அறிவுள்ளும்
தேடிக் களைத்து விட்டேன்;
வீடென்ன விடுகதையோ,
விடையில்லாக் கேள்வியோ - கண்ணன்
வேய்ங்குழல் மட்டுமே
கேட்குது என்னுள்ளே! (தேடும்)

## சந்திப்பேனோ!

*இராகம்: சாவித்திரி* *தாளம்: ரூபகம்*

அந்தரங்கமாய் உன்னைச் சந்திப்பேனோ

ஆத்மானந்தம் நான் பெறவே, கண்ணா!

அநுபல்லவி

சிந்தனைகள் நிறுத்தும் தியானவனம் ஒன்றில்

சேவடிகள் தேடியே ஓடி அலைகின்றேன்! (அந்தரங்கமாய்)

சரணம்

நந்தா, நீ ஊதும் குழலின்

நாதவெள்ளப் பேரலைகள்

வந்து வந்து மோதி என்னை

விரகத் துயரில் ஆழ்த்த

உன் பேரெழில் வடிவை

ஓயாது நினைத்திருந்தே

உழலுகின்றேன், விழிநீர்

உகுந்திருந்தே என்றும்!

ஊழ் களைய வாராயோ,

ஆழிமழைக் கண்ணா!

உதவியருள வாராயோ

கார்முகில் வண்ணா! (அந்தரங்கமாய்)

## ஓர் கவசம்!

*இராகம்: ஹம்ஸாநந்தி* *தாளம்: ஆதி*

ஏதோ ஓர் கவசம்

என்னைச் சுற்றி இருக்கின்றது!

இதமுடன் காக்கின்றது - அது

எப்போதும், உயிர்க்குதவி!

அநுபல்லவி

ஊதும் குழலோனின் - என்

உள் நினைப்புத் தழலோ அன்றி

தீதெல்லாம் விலக்கிடும்

ஸ்ரீசக்ர அருள் நிழலோ! (ஏதோ)

சரணம்

பேதமை நிறைந்த நான்

பிழை பல செய்தாலும்,

சோதனைகளுக்கு உள்ளாக்கும்

சுயநலம் உள்ளிழைவதால்,

ஸ்ரீதரனை, கண்ணனை

சேவித்திருந்தே என்றும்

மாதவமாய் நினைக்க - என்னை

மன்னித்தருளக் கண்டேன்! (ஏதோ)

# ஏது குறை எனக்கு!

*இராகம்: சக்ரவாகம்* *தாளம்: ஆதி*

ஏது குறை எனக்கு, கண்ணா!

என் அருகில் நீ இருக்க!

அநுபல்லவி

நீதி நேர்மை வழிநடக்க - நீ

நிலையாக என் பக்கம் இருக்க (ஏது)

சரணங்கள்

சோதனைகள் நேரும் போதெல்லாம் - நீ

கீதை கூறுவாய் எனக்கும்!

ஓதி உணர்த்த நீ இருக்க - உன்

அருட்பிடியில் நான் திளைக்க (ஏது)

தேவை என்பதெல்லாம் எனக்கு - என்

தெய்வம் உந்தன் அண்மையே;

காவலாய் எனக்கென்றும், கண்ணா!

கைவிடாது நீ துணை நிற்க (ஏது)

## அண்மையில்தான்!

*இராகம்: கல்யாணி* *தாளம்: ஆதி*

ஐம்புலன்களுக்கெட்டாது இருந்தாலும் என்றும்
அண்மையில்தான் என்னுள் இருக்கின்றாய், கண்ணா!

அநுபல்லவி

பாம்பணைமேல் என்றும் அறிதுயிலிலிருந்தாலும்,
பக்தர்கள் அழைத்திட பார் எழுந்தருளும் நீ (ஐம்புலன்)

சரணங்கள்

எம்பிரான் உன்னையே
எப்பொழுதும் நினைப்போர்
பக்கத்திலே இருப்பாய்,
பார்த்தருள்வாய் என்ற
நம்பிக்கையிலே நாளும் - உன்
நாமங்கள் உரைத்து.
நெக்குருகி உன்னை
அழைத்திருக்கின்றேன்! (ஐம்புலன்...)

வாசனைகள் பதிந்த
உயிர்களுக்குள்ளே
வாசம் செய்யும் ஜீவ
ஆன்மச் சுடர் நீயே!
பூசனைகளாய்ச் செயல்கள்
ஆற்றிடும் அன்பர்க்கெல்லாம் - ஹரி
கேசவனாய் நிற்பாய்
கிட்டத்தில் கிருபை செய்தே! (ஐம்புலன்...)



## எத்தனை பாதங்கள்!

*இராகம்: கர்ண ரஞ்சனி* *தாளம்: ஆதி*

எத்தனை பாதங்கள் ஒளிர்கின்றன
என் மனத்துள் இறைவா! - உன்

அநுபல்லவி

சத்தியமும் தர்மமும் வீழ்கின்ற போதெல்லாம்
இத்தலம் நடந்தாய் துஷ்ட நிக்ரகம் செய்தே! (எத்தனை)

சரணங்கள்

காடு நடந்த பாதம் கோதண்ட ராமனாய்,
ஞாலம் அளந்த பாதம் வடிவழகு வாமனனாய்;
ஏடு கொள்ளாச் சிறப்பு ஆடிய பாதம் மாயனாய்,
தூது நடந்த பாதம், துரியோதனன் சபைக்கே! (எத்தனை)

தஞ்சம் அடைந்தோர்க்கெல்லாம் தாமரை மலர்ப்பாதம்
அஞ்சேல் என அபயம் தரும் ஆலயம் தோறும்;
நெஞ்சில் மலர் நீலோத்பலம் நாராயணன் பாதம்
நினைந்திருக்கின்றேன், கண் பனித்திருக்கின்றேன்!

(எத்தனை)

## நாமஸ்மரணம்

*இராகம்: சுமநிச ரஞ்சனி* *தாளம்: ஆதி*

நெஞ்சம் இயங்கும்வரை - என்னுள்

நினைவலைகள் ஓயும்வரை,

நின் திருநாமமே, கண்ணா!

நினைத்திருப்பேன், நெகிழ்ந்துரைத்திருப்பேன்! 1

துஞ்சி மடியும் உயிர் - அதன்

தொடர் பயணப் பிறவிகளில் நேர்

அஞ்சுதலை நீக்கும் ஹரி நாமம்;

ஆன்ம சுகமருள் பலம் ஊக்கும்! 2

குன்றும் உடல் வலிமை - மூப்பில்

கூடும் நலிவு பல எனினும்,

வென்று மனம் நல்வழி நடத்தும் நாமம்

என்றும் நினைந்து, நெகிழ்ந்துரைத்திருப்பேன்! 3

எண்ணக் கடலலைகளெல்லாம் - என்னை

எங்கெங்கோ அலைக்கழிக்க,

வண்ணப் பிடியாய் உன் நாமமே - என்

வாழ்க்கைப் படகைக் கரையேற்றும்! 4



## பணி மனமே!

*இராகம்: மலையமாருதம்* *தாளம்: ஆதி*

வேணுவிலோலனைப் பணி மனமே நீ - இவ்
வையக வாழ்வில் என்றும் பேரின்பமே நுகர!

அநுபல்லவி

காணும் பொருளிலெல்லாம் கார்வண்ணன் எழிலினையே
கண்டு ருசித்து மகிழப் பழகுவாய் நீ மனமே! (வேணு...)

சரணம்

பூணும் ஓர் விரதம்
வேறேதும் வேண்டுமோ,
புருஷோத்தமன் முகமே - எழில்
பூத்து நின்றால் உன்னுள்!
மாணடியைப் புகலருளும்
மார்க்கமெனக் கொண்டே
முரஹரியின் பாதம்
சரணடைவாய், மனமே! (வேணு...)

# ஸ்ரீ ஹரி நாமமே!

*இராகம்: சாருகேசி* *தாளம்: ஆதி*

ஸ்ரீ ஹரி நாமமே

நீ நினை மனமே,

நினைப்போர்க்கெல்லாம்

இல்லை பயமே!

அநுபல்லவி

திருமாலின் ஆயிரம்

திருநாமங்கள் சுவைக்க

அனுதினம் நீ

பழகு, மனமே! (ஸ்ரீ ஹரி)

சரணம்

சிறைபுகும் உயிர்கள்

விடுதலைக்கே உதவும்

ஸ்ரீ ஹரி நாமமே

எளிதாய் என்றும்;

குறை யாவுமே தீர்த்து

குணநலன்கள் சேர்க்கும்

ஸ்ரீ ஹரி நாமமே

நினைத்திரு மனமே! (ஸ்ரீ ஹரி)



## ஒளஷதமும் எழும்!

*இராகம்: சாரமதி* *தாளம்: ஆதி*

விருத்தம்

கடல் ஆமை வடிவெடுத்த திருமால்
கதை கேட்டு மனத்தாழம் கடைந்தால்
மடல் ஆயிரம் கொண்ட தாமரையும்
மதி தோன்ற, தெய்வீக வலிமை எழும்!
உடல் ஏந்தும் பிணி தீர்க்குமோர்
ஒளஷதமும் எழும்; அருந்த உயிர் உய்யும்!

பல்லவி

இறை நாமம் ஒன்றால்
இதயம் கடைந்திருக்க
இன்னருள் திரண்டெழும்
இஷ்டமா சித்திகளாய்!

அனுபல்லவி

மறையோன் துயில் கொள்ளும்
மனவெளியே பாற்கடல்;
மந்தாரமலை மத்தே
மனனம் செய் திருநாமம்! (இறை)

சரணங்கள்

வடமாய் உணர்வுகளும்

வாசுகியாய்ச் சுழல

விடமாய் வெளியேறும்

உடல், உள்ள மாசுகளும்;

கொடையாய் நற்செல்வங்கள்

கோலமாய்ப் பூத்தெழும்,

அடைய விழைவதெல்லாம்

அருள் மழையாய்ப் பொழிந்தே

(காமதேனுவாய், ஐராவதமாய், கௌஸ்துப மணியாய்,
கோல மஹாலட்சுமியாய்!) (இறை)

இடரானவை களைந்து

ஹரிநாமமே நினைந்து

தடம் மாறாதிருந்து

ஆழ் தியானம் தொடர,

குடம்நிறை அமுதமும்

கொணர்வான் தன்வந்திரி - நம்

உடல் உறை இறையோடு

இணையலாம் உயிர் ஒன்றி! (இறை)

## கீதாம்ருதம்

*இராகம்: சரஸாங்கி* *தாளம்: ஆதி*

கீதாம்ருதம் பொழிந்தே அருள் செய்த
கருணா மூர்த்தியைப் பணி மனமே!

அநுபல்லவி

ராதா ரமணனைப் பொழுதும் நினைந்து
நாமஸ்மரணமே செய்திரு மனமே! (கீதா)

சரணங்கள்

ஊதுகுழல்போல் இருப்பாய் என்றும்
உத்தமன் அருள் நாடிப் பண்ணிசைப்பாய்;
நாதஸ்வரூபனை நேயமுடன் நெருங்கும்
நல்வேளை வரும், அருள் விழிகளும் படும்! (கீதா)

ஞானரதமாய் நீயாக விழைந்தால் - அங்கு
நாராயணன் அமர்வான் கீதை சொல்ல;
ஈனமெல்லாம் ஏகும், யோக நிலையும் கூடும்.
ஆரமுத ஆழியுள் ஐக்கியமும் ஆகலாம்! (கீதா)



## அறவழி நடக்க!

*இராகம்: ஆனந்த பைரவி* *தாளம்: ஆதி*

அடி அடியாய் வைத்தே - நல்ல
அறவழி நீ நடக்க,
ஆன்ம தரிசனமே திண்ணம்
பெறுவாய், என் மனமே!

அநுபல்லவி

படிப்படியாய் முன்னேற - நற்
பண்புகளே உதவும் - செய்
பிரார்த்தனைகள் யாவுமே
பூர்த்தியாய் நிறைவேறும்! (அடி)

சரணங்கள்

தேடும் உயர் குறிக்கோளும்
தெள்ளத் தெளிவாகிவிடும்
திடமான நம்பிக்கை
தெய்வீக பலமருள;

காடும் நந்தவனமாகி - எழில்

காட்சிகள் மலர்ந்து விடும்;

ஈடில்லா இன்பமுமே

இன்னுயிரில் கூடி விடும்! (அடி)

பாயும் உன் அலைகளெல்லாம்

பரவசத்தில் ஆழ்ந்துவிட

தூய ஆன்மச் சுடர்

உன் விழிகளுக்கே புலனாகும்;

ஆய கலைகளெல்லாம்

அகவெளியில் நடமாடும்;

வேயின் குழலோனே

உன்னோடொன்றிடுவான்! (அடி)



## பூரண சரணாகதி!

*இராகம்: தேஷ்* *தாளம்: ஆதி*

பூரண சரணாகதி அடைந்திடு நீ,

ஆரா அமுதன் கண்ணனிடம் நன்னெஞ்சே!

அநுபல்லவி

வேரிணையே இல்லா பேரருட்தெய்வம்,

வையம் வந்தருளும் வேதஸ்வரூபனிடம்! (பூரண)

சரணங்கள்

வாரணம் இன்னலில் அலறி அழைத்ததும்

நிவாரணம் செய்ய விரைந்தே வந்தவன்;

பாலன் பிரஹ்லாதனின் துயர் களைந்தவன்;

ஏழைக் குசேலனுக்கும் வாழ்வளித்த அவனிடம்! (பூரண)

அகல்யை தன் சாபம் நீங்கி எழுந்திட

அரவிந்த பாதத்தால் நல்லருள் செய்தவன்;

துகில் உருவிடும் போதில் துரௌபதிக்கே

புகல் அளித்தே, இரட்சித்த கார்வண்ணனிடம்! (பூரண)



## காளிங்க நர்த்தனம்!

*இராகம்: சிவரஞ்சனி* *தாளம்: ஆதி*

தாள்மலர் தூக்கியே ஆடும் உன்னை - நான்

சந்தக்கவி பாடி துதிக்கின்றேன், கண்ணா!

அநுபல்லவி

காளிங்க நர்த்தனம் காண்பதற்கு அற்புதம்!

கண்டிருந்தே மகிழ்வேன், காலமெல்லாம் கண்ணா!

(தாள்மலர்)

சரணம்

ஊழெனும் நச்சரவம்

உறு பிறவிதோறும்

உயிரினைப் பற்றியே

ஊறு செய்வதறிவேன்;

வீழ்த்தி அதன் சிரம்

வைத்தாடுவாய் பதம்,

வேய்ங்குழலோன் நீயே,

வேண்டுகிறேன் அருள்! (தாள் மலர்)

## பஞ்சபூத மனம்!

*இராகம்: இராகமாலிகை* *தாளம்: ரூபகம்*

காபி

கண்ட விதையெல்லாம் முளைத்துக்
களை மண்டும் என் மனநிலத்தில்
கொண்டல் வண்ணன் திருநாமங்களைக்
குழித்து அணியாய் விதைத்து விட்டேன்! 1

மாண்டு

மாசுடைய மனக் குளத்துப்
பாசிபடர் துறையமர்ந்து
கேசவன் திருப்பெயர்களையே
இசை கலந்து பருகி விட்டேன்! 2

ஷண்முகப்ரியா

சுழன்றடிக்கும் என் மனத்துச்
சூறாவளி மையம் நின்று
கண்ணன் அவன் எழில் நாமங்களைக்
காற்றென மூச்சிழுத்து விட்டேன்! 3

சிந்து பைரவி

நெஞ்ச உலைக் களத்தில் - அங்கு

நேரும் விரகத்-தாபத் தீயில்

நந்தனையே நினைந்துருகி

வெந்தும் வீழ்ந்து விட்டேன்! 4

பாகீஸ்வரி

மார்க்கம் புலனாகா

மனவெளியில் மருளும் என்னை

தீர்க்காயுட் சிறை மீட்க

திருமாலும் வந்தருள்வானோ! 5





## பிருந்தாவனம்!

*இராகம்: இராகமாலிகை* *தாளம்: ஆதி*

யமுனா நதிதீரம் அங்கு பிருந்தாவனம்,

ஊதுகின்றான் குழல் யதுநந்தனன்!

அமுதிசையாய் எழுந்தாள் யமுனா கல்யாணி!

ஓம் என முழங்கி எங்கும் ஆடுகிறாள் - பிரணவ

ஓம் என முழங்கி எங்கும் ஆடுகிறாள்! 1

துயிலெழும் இயற்கைத் துளசிவனம்,

ஊதுகின்றான் குழல் யதுகுல திலகன்!

ஒயிலாய் உயிர் பூத்தாள் பூபாளம்!

இணையடி தொழுதே ஆடுகிறாள் - கண்ணன்

இணையடி தொழுதே ஆடுகிறாள்! 2

சுடும் வெய்யோன் காயும் சோலைவனம்,
ஊதுகின்றான் குழல் ஹரிமாதவன் அவன்!
படர்ந்தாள் இசைக்கொடி **பிருந்தாவனி!**
பாதாதி கேசம் தொழுது ஆடுகிறாள் - கண்ணன்
பாதாதி கேசம் தொழுது ஆடுகிறாள்! 3

கார்முகில் சூழும்போதில் மயிலாடும் வனம்,
ஊதுகின்றான் குழல் மதுசூதனன் அவன்!
ஆரமுதாய் உதிர்ந்தாள் **அமிர்தவர்ஷிணி!**
நீராஞ்சனம் செய்தே ஆடுகிறாள் - ஹரியை
நீராஞ்சனம் செய்தே ஆடுகிறாள்! 4

அந்தி மயங்கும் நேரம் மாமதுவனம்,
ஊதுகின்றான் குழல் மாரமணன்!
சந்தக் கவிநடையில் கொஞ்சி வந்தாள் **வசந்தா!**
சரணக் கமலங்கள் சூடி ஆடுகிறாள் - நந்தன்
சரணக் கமலங்கள் சூடி ஆடுகிறாள்! 5

பௌர்ணமித் தேனிலவில் பொங்கு பேரன்புவனம்,
ஊதுகின்றான் குழல் சியாமளரூபன்!
சௌந்தர்யமாய் மலர்ந்தாள் **கர்ணரஞ்சனி!**
சாகரம் அமிழ்ந்தே ஆடுகிறாள் - பேரன்புச்
சாகரம் அமிழ்ந்தே ஆடுகிறாள்! 6

மாஞானியரும் நண்ணும் பக்தியோகவனம்,

ஊதுகின்றான் குழல் கோவிந்தன்!

நாமாவளி தொடுத்தாள் ரீதிகௌள அவள்!

ஆராதனை செய்தே ஆடுகிறாள் - மாயனை

ஆராதனை செய்தே ஆடுகிறாள்! 7

விரகமுணர் உயிர்க்கே வைபோக வனம்,

ஊதுகின்றான் குழல் மதுவனமாலி!

உருகியே ஓடும் இமயம் ஹேமவதி!

ஒன்றிடத் துடித்தே ஆடுகிறாள் - கண்ணனுடன்

ஒன்றிடத் துடித்தே ஆடுகிறாள்! 8

ஆத்மசங்கமம் நிகழ் ராசலீலாவனம்,

ஊதுகின்றான் கண்ணன், நடம் ஆடுகின்றான்!

காற்றினில் மேவும் அங்கு கல்யாணவசந்தம்!

காட்சி எங்கெங்கும் கண்ணனே, மணிவண்ணனே,

காட்சி எங்கெங்கும் கண்ணனே, மணிவண்ணனே! 9



## ஆடல்கள்!

*இராகம்: இராகமாலிகை* *தாளம்: ஆதி*

யதுகுலதிலகன் யமுனைத் துறைவன்
அமுதிசை பொழிகின்றான், இராக தேவதைகள் ஆட!
உதய ரவிசந்திரிகா ஆடுகிறாள் அங்கு,
குமுதம் விரியும் கோல எழில் சிந்தி! 1

அஞ்சன எழில் வண்ணன் ஆழிமழைக் கண்ணன்,
அமுதிசை பொழிகின்றான் பிருந்தாவன வெளியில்!
கொஞ்சும் சதங்கையொலி எங்கெங்குமே கேட்க,
ஆந்தோளிகா அவள் ஆடுகிறாள்! 2

திங்களழகு வதனன் நந்தகோபன் குமரன்
தேனிசை பொழிகின்றான் வேய்ங்குழலிசைத்து!
சங்கீத ஆரண்யம் அங்கு சந்தோஷம் பூக்க,
அன்பன் முன்னே நின்று ஆடுகிறாள் தேனுக! 3

பக்தியோக தபோவனம் அந்த பிருந்தாவனம்,
சித்தமொன்றி சேவிப்போர்தம் தியானவனம்!
உத்தமனைச் சேவித்து அங்கு ஆடுகிறாள்
பக்தை அவள் பூரண சந்திரிகா! 4



## குழலின் சுயசரிதை!

*இராகம்: சுத்த தன்யாசி* *தாளம்: ரூபகம்*

ஞாபகம் வருகின்றது
　　துவாபர யுகம் அது;
கோபி மனோகரன் என்னைக்
　　கொய்தெடுத்த நாள் அது!

அநுபல்லவி

சோபன ஒலி உதிர
　　சௌந்தரியம் விழி மலர
தீபச் சுடரொன்று - மெய்
　　தொட்டுத் துளையுண்டேன்! (ஞாபகம்)

**சரணங்கள்**

கரும்புக் கனவெல்லாம்
　　காட்சியில் நனவாக,
இரும்பின் உறுதிநயம்
　　ஈட்டி என் இயல்பாகி,

குறும்புக் கண்ணன் செய்யும்
கூத்தில் விளையாட்டுக்களில்
நிரம்பி வழிந்தோடும் - நல்ல
நேர்த்தி இசை வெள்ளமானேன்! (ஞாபகம்)

கண்ணன் இதழ்ச் சுவையை
பண்ணில் குழைத்தெடுத்து,
காந்தன் விரல் சுகித்து
கானம் பொழிந்திருந்தே
வண்ணன் வாய் மணத்தில்
என்னை இழந்து விட்டேன்;
வாழ்க்கைப் பயண இறுதி
இலக்கினையும் எய்தி விட்டேன்! (ஞாபகம்)



# மாமயிலின் தேடல்!

*இராகம்: சுபபந்துவராளி* *தாளம்: ஆதி*

கிருஷ்ணா, கிருஷ்ணா என்றழைத்தே நான்
பிருந்தாவனமெங்கும் அலைகின்றேன்!
விருட்சங்கள் அடர்ந்த கானகமெங்கிலும்
வேணுவிலோலனைத் தேடுகின்றேன்! (கிருஷ்ணா)



சிருஷ்டியில் புள்ளாய்ப் பிறந்து விட்டாலும்
சிறப்புப் பேரெழில் தோகை படைத்து
இஷ்ட என் முருகனின் வாகனமுமாகி
எல்லையில்லாப் பரவெளியில் உலவியே (கிருஷ்ணா)

வேல்முருகன் மாமன் வைகுந்தன் அவன்
விருப்பமுடன் என்றும் சிரம் அணியும் எந்தன்
பீலியினை நந்தன் சிகையினில் சூட்டி
பரவசமெய்திட மனம் மிக விழைந்து (கிருஷ்ணா)

எட்டும் தூரத்தில் இருந்தாலும் கண்ணன்
ஏமாற்றும் கலையினில் மாவித்தகன்!
ஒட்டி உறவாடும் கோபியர் யாவரையும்
விட்டகன்றே எங்கு ஏகி மறைந்தானோ! (கிருஷ்ணா)



## விஸ்வரூப தரிசனம்!

*இராகம்: கௌரி மனோகரி* *தாளம்: ஆதி*

அச்சுதன் அருள அர்ஜுனன் கண்டான்
அற்புத விஸ்வரூப தரிசனமே! - அங்கு

அநுபல்லவி

சித்தம் நடுங்கிடச் சேவித்து நின்றான்
உத்தம நண்பனை ஊழிமுதல் என்றுணர்ந்தே! (அச்சுதன்)

சரணங்கள்

குற்றமென எண்ணும் - அவன்
கோழை மனம் திருந்த
உற்ற நல்லுபதேசம்
பற்பல மொழிந்த பின்
பற்றி எரியும் ஞாலப்
பிரளயமா அக்னியாய்
பயங்கர உருவெடுத்தான்
பார்த்தசாரதியே! (அச்சுதன்)

வேதங்கள் ஓதியும்
வேள்விகள் நடத்தியும்
விரதமிருந்தும், தான
தருமங்கள் செய்தும்
சாதித்துப் பெற இயலா
காட்சிகளாய் விரிந்தே
சந்தேகங்கள் தீர்த்தான்
சியாமள ரூபனே! (அச்சுதன்)

ஆதிமுதல் அவன்,
அந்தர்யாமி அவன்,
ஆயர்பாடியில்
கோபாலன் எனினும்,
யாதுமாய் எங்கிலும்
வியாபிக்கும் அவனே
இன்னுயிர் தன் நண்பன்
என்றறிந்தான் அர்ஜுனன்! (அச்சுதன்)



## அருட்கரங்கள் நான்கு!

*இராகம்: தர்மவதி* *தாளம்: ஆதி*

உள்ளத்தின் உட்குரலாய்ச்
சங்கொலிக்கத் திருமால்
உற்றுக் கேட்டிருந்தே நாம்
ஒழுகிடுவோம் நெறியாய்!

அநுபல்லவி

பள்ளி எழுந்தோனாய்
பத்மம் ஏந்தும் அவன்
பல்வகைச் செல்வங்களும்
அள்ளி வழங்கிடுவான்! (உள்ளத்தின்)

சரணம்

தன்னலம் மிகுந்தே நாம்
தரும நெறி தவற
தண்டாயுதம் கொண்டே
திருத்திட முயல்வான்;
இன்னமும் ஓயாது
இழைத்திருந்தால் தீமைகள்
ஏந்தும் ஸ்ரீ சக்ரமதால்
அழித்திடுவான் ஆணவத்தை! (உள்ளத்தின்)



## வேழமுகா!

*இராகம்: ஹமீர் கல்யாணி* *தாளம்: ரூபகம்*

வேறென்ன நான் வேண்டுவேன்
வேழமுகா, உன் இணையடியின்றி!

அநுபல்லவி

பூரணனே நீ, இப்பாரெழும்
பரமதயாளன், பேரிறை உன்னிடம் (வேறென்ன)

சரணம்

ஓர் அருகம்புல்லானால் நான்
அணுகிடுவேன் உன்னை;
ஓர் எருக்கம்பூவானால் நான்
அணி செய்வேன் உன்னை!
இறை முதலோன் எனினும் நீ
தெருமுனையிலும் அமர்வாய்!
கருணாமிருத ஸ்வரூபம் நீ
மர நிழலிலும் அமர்வாய்!
பிரணவஸ்வரூபனே, உன்
பதமலர் தந்தருள்;
சரணாகதி என்கின்றேன்
சன்னிதி வந்துன்னிடம்! (வேறென்ன)



## எண்ண எண்ண...

*இராகம்: ஹம்ஸாநந்தி* *தாளம்: ஆதி*

எண்ண எண்ண இனிக்கும்
ஏறுமயில் வாகனனை
ஷண்முக சிவபாலனை
சரவணனை, குகனை!

அநுபல்லவி

கண்ணன் மால் மருகன்,
கார்த்திகேயன் முருகன்,
செம்மொழி தமிழ் இறைவன்,
சேவல் கொடியோன், அவனை (எண்ண)

சரணம்

அண்ணன் ஐங்கரன் உதவ
வள்ளியை மணந்தவன்;
ஆறுபடை வீடமர்ந்தே
அவனியோர்க்கு அருள்பவன்;
விண்ணவரும் போற்றும்
வடிவேலன், பேரழகன்;
வேதப் பொருள் பிரணவம்
விளக்கிய குருமுதல் அவனை (எண்ண)



## ஓம் ஜகதீசா!

*இராகம்: ஜோன்புரி* *தாளம்: ஜம்பை*

நினைத்தாலே போதும்
நீ உறை மாமலையை,
நின் திருவண்ணாமலையை,
ஓம் ஜகதீசா!

அநுபல்லவி

மனத்தாழம் மேவும்
மெய்யன்பின் திறத்தாலே
முன்வினைப் பயன் யாவும்
முடிவுறும், உய்ய நாம் (நினைத்தாலே)

சரணங்கள்

அடிமுடியே காணா
அயன், மால் அலைந்திடவும்
விடமுண்ட கண்டன் நீ
விச்வ ரூபமே கொண்டாய்!

சுடர் வடிவாய் ஞானப்

பரஞ்சோதியாய்த் தோன்றி

அடியார்களும் மகிழ

தரிசனம் தருகின்றாய்! (நினைத்தாலே)

திக்கெட்டின் அதிபதிகள்

தியான லிங்க வடிவில்

சுற்றியமர்ந்தே உன்

சேவடி தொழுதிருக்க

பக்தர் குழாம் பல்லாயிரம்

பரஞ்சோதி உன்னைப் போற்றும்

அற்புதக் காட்சி காண

ஆயிரம் கண் வேண்டும்! (நினைத்தாலே)





## சிவனைத் துதிப்போம்!

*இராகம்: நாட்டைக் குறிஞ்சி* *தாளம்: ஆதி*

தாண்டவமாடிடும் சிவனைத் துதிப்போம்
தத்துவம் உணர்ந்தே பக்தியுடன் நாம்!

அநுபல்லவி

யாண்டும் எதிலும் ஆனந்த நடனம் - ஐயன்
ஏந்தும் வடிவில் ஐந்தொழிலும் விளங்கும்! (தாண்டவம்)

சரணங்கள்

ஆக்கல், காத்தல், அழித்தல் முத்தொழிலும் - அவன்
நீட்டிய கரங்கள் எழிலாய்க் குறிக்கும்;
தூக்கிய பாதமே உயிர்களுக்கருளும் - அவன்
ஊன்றிய பாதமே மாயையென மறைக்கும்! (தாண்டவம்)

தோம் தோம், ததுங்கின தோமென ஆடும் நடராஜன்,
தில்லை சிதம்பரம் எழுந்தருள்கின்றான்;
க்ஷேமமுடன் வாழ ஊழ்வினைகள் ஒழிய - அவன்
சேவடிகள் வீழ்ந்தே சரணடைவோம் நாம்! (தாண்டவம்)



## அம்பிகையே!

*இராகம்: மாண்டு* *தாளம்: ரூபகம்*

ஆட்கொள்ளும் அன்பே நீ
அம்பிகையே தாயே!

அநுபல்லவி

நாட்களெல்லாம் வாழ்வில் - ஜகந்
நாயகியே உன்னை, அருள்
வேட்கையுடன் நினைந்துருகி
விழிநீர் மல்குகின்றேன்! (ஆட்கொள்ளும்)

சரணம்

சூட்சுமப் பேரறிவும், ஒளிர்
சௌந்தரியமும் நீயே எங்கும்!
சாட்சாத்காரமாய் - இத்
தாரணியிலும் எழுவாய் நீ!
பூத்தருள் எனக் கேட்டே, விழிகள்
பொன்னடி பணிந்து நின்றே,
காத்திருக்கின்றேன், உமையே,
கற்பகமே, கண்ணம்மா! (ஆட்கொள்ளும்



## ஸ்ரீதரா!

*இராகம்: சந்திரகௌன்ஸ்* *தாளம்: ரூபகம்*

சதா உந்தன் நாமங்கள்
ஜபித்திருக்கின்றேன் ஸ்ரீதரா!
ஏழுமலை வாசா, அருள்வாய்!

அநுபல்லவி

சதா நின் திருவேங்கடம் என்
மனத்திரையில் தோன்ற நான்
சதா நின் திருக்கோலங்கள்
நினைத்திருக்கின்றேன், மாதவா! (சதா)

மாரமணா, நின் மலையெங்கிலும்
மார்கழிச் சூழல் நிலவக் கண்டேன்!
ஆரமுதாய் நின் விழிபொழியும்
கருணை மழையினில் அமைதி கண்டேன்!
கோரிய யாவையும் - ஹரி
கோவிந்தன் நீ அருள,
வேறேது தெய்வம் எனக்கு
வேங்கடவா நீயன்றி! (சதா)

## சோளிங்கர்

*இராகம்: நாட்டை* *தாளம்: ஆதி*

சிம்மமாய் அன்று
சினந்தெழுந்தாய் - உன்னைச்
சேவித்து அருள் பெறுவோம்
சோளிங்கமலை ஏறி!

அநுபல்லவி

எம்மைக் காக்கும் தெய்வம் நீ
எக்குறையும் நீக்கிடுவாய்:
அன்னை அன்பாய் இனிக்கும்
அக்காரக் கனியாவாய்! (சிம்மமாய்)

சரணம்

அஞ்சனை மைந்தனில் உன்
அருளெல்லாம் எதிரொலிக்க
அமர்ந்திருக்கின்றாய் நீ,
யோக நிலையில் மலைமேல்;
நெஞ்சில் உந்தன் ஞாபகங்கள்
ஞான ஒளி தீபங்களே!
தஞ்சமென்றால் போதும்
சகலமும் எமக்கருள்வாய்! (சிம்மமாய்)



## இனி என் பயம்?

*இராகம்: ஸிம்மேந்திரமத்யமம்* *தாளம்: ஆதி*

இனி என்ன பயம் எனக்கு - ஸ்ரீ
நரசிம்மம் நீயே துணையிருக்க!

அநுபல்லவி

அனந்தசயனன் நீ,
அறிதுயில் எழும் ஹரியே!
சினந்தெழுந்தாலும் உன்னைச்
சியாமளன் என அறிவேன்! (இனி)

சரணம்

பக்த பிரஹ்லாதன் அழைக்க
பக்கம் நின்ற தூண் பிளந்து
சக்திப் பிரளயமாய் வந்தே
துஷ்ட நிக்ரகமும் செய்தாய்;
உக்ரம் மிகு மூர்த்தி - ஸ்ரீ
லக்ஷ்மி நரசிம்மன் உன்னை
நெக்குருகி நினைப்போர்க்கே
எக்குறையும் இருப்பதுண்டோ? (இனி)

## சபரிமலை

*இராகம்: கௌரி மனோகரி* *தாளம்: ஆதி*

சமயம் கடந்து நிற்கும்

சன்னிதி ஒன்றுண்டு,

சகலரும் அறிவீர்;

சபரி மலை அது!

அநுபல்லவி

இமயம் உறை ஈசன்

இணைய ஹரியுடன்

இகமதில் உதித்தான்

எழிலொளிர் ஐயப்பன்! (சமயம்)

சரணம்

ஹரிஹரசுதன் அவன்

ஐயப்பன் மணிகண்டன்;

வரையறையேயில்லா

அருளும் கருணைத் தெய்வம்!

முறையாய் விரதமிருந்தே

இருமுடி சூடி - அவன்

உறைவிடம் ஏகிப் பணிய

குறைகள் களைந்தருள்வான்! (சமயம்)



## பரமசுகம்!

*இராகம்: வரமு* *தாளம்: ஆதி*

பார்த்துக்கொண்டே இருந்தால்
பரம சுகம் என்னுள்
மூர்த்தியாய் எழுந்தருள்
இறை உன்னையே என்றும்!

அநுபல்லவி

நேர்த்தி எழில் கண்டு - என்
நெஞ்சு நிறைந்து நின்று
கீர்த்திப் புகழ் பாடி - நின்
கழல்கள் பணிந்திருந்தே உன்னைப் (பார்த்துக்)

**சரணங்கள்**

வார்த்த சிலைகளிலே
வண்ணமாய் வந்தமர்வாய்!
ஈர்த்து சுயம்புவாயும் நீ
ஆலயமும் கொள்வாய்!

ஊர்த்துவ தாண்டவமே
எங்கிலும் ஆடும் நீ
பூத்தொளிர் சௌம்யமாய் - அருட்
தெய்வமாய்க் காட்சி தர நீ (பார்த்துக்)

வேழமுகன், சிவன்,
வேல் முருகையயன்,
ஆழிமழைக் கண்ணன்,
அனந்தசயனன் என
ஊழிமுதல் நீயே - எக்
கோயிலிலும் வந்தருள
ஏழிசையில் உன் நாம
ஆரா அமுதுண்டு நான் (பார்த்துக்)



# இரவுகள் ஒன்பது

*இராகம்: சுத்த சாவேரி* *தாளம்: ஆதி*

இரவுகள் ஒன்பதைக் கொண்டாடுவோம் நாம்;

ஸ்ரீ தேவியை, துர்கையை, சரஸ்வதியைப் போற்றி!

அநுபல்லவி

நிறைவு தரும் இன்னருள் வேண்டி நின்றே- தேவியர்

ஈந்த நற்செல்வங்களை எழிலாய்க் கொலு வைத்தே!

(இரவுகள்)

சரணங்கள்

வீரமும் வெற்றியும் ஸ்ரீ துர்கை நமக்கருள,

வாழ்க்கைக்குப் பொருளெல்லாம் ஸ்ரீ லட்சுமி உவந்தருள,

பேரறிவும், கலைகளும் ஸ்ரீ வாணி கனிந்தருள,

பூரணமாய் வாழ்வோம் புரிந்தே நற்செயல்கள்! (இரவுகள்)

ஆக்கும் தெய்வமாம் நாமகள் போற்றி - தீயவை

அழிக்கும் தெய்வமாம் மலைமகள் போற்றி!

காக்கும் தெய்வமாம் திருமகள் போற்றி! - நாம்

வழிபடுவோம், அனைத்து நலன்களும் பெறுவோம்!

(இரவுகள்)



## சரணம் ஆஞ்சநேயா!

*இராகம்: பெஹாக்* *தாளம்: ஆதி*

அஞ்சலி செய்குவோம் ஆழ நினைந்துருகி
அனுதினம் ஸ்ரீ அனுமனையே நாம்!

அநுபல்லவி

நெஞ்சில் பயம் நீங்கும்; நேர்மைத் திறம் ஓங்கும்;
வஞ்சனை தீதணுகா வாழ்க்கைத் தடம் அமையும்!

(அஞ்சலி)

சரணம்

ரஞ்சிதம், ரம்யம் இராமனின் நாமம்;
மஞ்சுளம், மோகனம் உணர் திவ்ய நாமம்!
சந்ததம் ஸ்ரீ அனுமன் சுகித்திருக்கும் நாமம்;
சன்னிதி எங்கிலும் ஒலித்திருக்கும் நாமம்!
மந்திரமாய் ஜபிப்போம் மாரமணன் நாமம்;
வந்தருளக் கேட்டே ஸ்ரீ மாருதியை நாமும்;
சரணம், சரணம் ஸ்ரீ ராமா!
சரணம், சரணம் ஆஞ்சநேயா!

(அஞ்சலி)

# பஞ்சமுக அனுமன்

*இராகம்: வலஜி* *தாளம்: ஆதி*

பஞ்சமுக அனுமனின் தாள் பணிவோம்,

பக்தியுடனே, சித்தமொன்றியே நாம்!

அநுபல்லவி

செஞ்சுடராய் ஒளிர் அனுமன் முகம் - நாம்

அஞ்சும் பகைவென்று அபயம் அருளும்! (பஞ்சமுக)

சரணங்கள்

தீராப் பிணி தீர்க்கும் கருட முகம்,

செய்வினைகள் நீக்கும் சிம்ம முகம்;

பேரறிவை வளர்க்கும் ஹயக்ரீவ முகம்,

பெருநிதியே அருளும் வராக முகம்! (பஞ்சமுக)

பிரமன், திருமால், பரமசிவன் - மும்

மூர்த்திகளின் தன்மைகள் கொண்டே

நிறைவாய் அருள் நல்கும் அனுமன் அவன்

இருதாள் வீழ்ந்தே சரணடைவோம்! (பஞ்சமுக)



## அர்ச்சாவதாரமாய்!

*இராகம்: கர்ண ரஞ்சனி* *தாளம்: ஆதி*

அகம் உறை இறைவனே அர்ச்சாவதாரமாய்
எழுந்தருள்கின்றான் ஆலயந்தோறும்!

அநுபல்லவி

புகல் தரும் பதமலர்
பார்த்து நின்றால் போதும்,
பழுதெல்லாம் நீங்க நம்முள்
பக்திப் புனல் ஊறும்! (அகம்)

சரணம்

கஜமுகனோ, குகனோ,
கங்கையணி சங்கரனோ,
காரெழில் மாதவனோ - திருக்
கோலம் யாதெனினும்,
நிஜமுழு முதலோனாய்
நின்றருளும் பேரெழிலை
நேரில் கண்டே நெகிழ
நிறைவினை எய்திடலாம்! (அகம்)

## வழிபாடு!

*இராகம்: இராகமாலிகை* *தாளம்: ஆதி*

அருகம்புல்லெடுத்து
ஹம்ஸநாதத்தில் தொடுத்து
ஐங்கரனை அழகாய்
அலங்கரிப்போம்!
பிரணவஸ்வரூபனின்
நாமங்கள் இசைத்தே
பதமலர் பணிந்தே
சரணடைவோம் நாம்! 1



செவ்வந்திப் பூவெடுத்து
சாமரத்தில் தொடுத்து
ஷண்முக குகனை,
அலங்கரிப்போம்!
திவ்ய நாமாவளி
இசையினில் சுவைத்தே
தண்மலர்த்தாள் பணிந்தே
சரணடைவோம்! 2

வில்வ இலை எடுத்து
வலஜியிலே தொடுத்து
ஈசனின் லிங்கத்தை
அலங்கரிப்போம்!

சொல்லியே நாமங்கள்
கன்னல் மொழி இசையில்
ஜோதிஸ்வரூபன் தாள்
சரணடைவோம்! 3

சம்பங்கிப் பூவெடுத்து
சாரமதியில் தொடுத்து
அம்பிகை கௌரியை
அலங்கரிப்போம்!
இரம்யமிகு நாமங்கள்
இராகத்தில் சுவைத்து
அம்மை அடிமலர்
சரணடைவோம்! 4

சங்கு மலர் கொய்து
சக்ரவாகத்தில் கோர்த்து
ரங்கசாயியை நன்கு
அலங்கரிப்போம்!
மங்கள நாமங்கள்
மாதுர்யமாய் இசைத்து
அன்பன் மலர்த்தாள்
சரணடைவோம்! 5

துளசி தளம் எடுத்து
வாசஸ்பதியில் தொடுத்து
திருமால் நரசிம்மரை
அலங்கரிப்போம்!
நலம் தரும் நாமங்கள்
நாதத்திலே சுவைத்து

நாராயணன் தாள்
சரணடைவோம்! 6

செந்நிற ரோஜா எடுத்து
சந்திரகௌன்ஸில் தொடுத்து
திருமகள் ஸ்ரீதேவியை
அலங்கரிப்போம்!
சந்ததம் அவள் நாமங்கள்
சங்கீர்த்தனம் செய்தே
சேவடி தொழுதே
சரணடைவோம்! 7

மல்லிகை மலரெடுத்து
மதுவந்தியில் தொடுத்து
கலைமகள் வாணியை
அலங்கரிப்போம்!
தெள்ளமுதே ஊறும்
நாமங்கள் சுவைத்தே
தேவியின் மலர்த்தாள்
சரணடைவோம்! 8

மலர் யாவும் கொய்து
மத்யமாவதியில் கோர்த்து
மாருதியை அழகாய்
அலங்கரிப்போம்!
உளம் உருகி இராம
நாமமே இசைத்து
ஸ்ரீ அனுமனின் தாள்
சரணடைவோம்! 9





## நாதோபாசனை

*இராகம்: ஆபோகி* *தாளம்: ஆதி*

நாத உபாசனை செய்வோம் நாளெல்லாம்
கோதெல்லாம் அகல உயிர் உருகியே நாம்!

அநுபல்லவி

யாதுமாய் எங்கிலும் இலங்கும் ஈசனை
மாதுர்யமாய்ச் சுவைத்து இன்னிசையமுதினில் (நாத)

சரணம்

கோதண்ட இராமனாய் - வேய்ங்
குழலூதும் மாயனாய்,
பூதலம் நடந்த
புருஷோத்தமன் அவன்;
பாதமே சரணென
பண்ணிசைத்திருந்தே
ஆதார சுருதியினில்
ஆவி கலந்திடவே (நாத)

# இறை நாம ஒலி

*இராகம்: திலங்* *தாளம்: ஆதி*

ஒலியே நல்லதோர் ஔடதம் - நாம்

உச்சரிக்கும் அமுத இறை நாம (ஒலியே)

அநுபல்லவி

நலியும் நல்வாழ்க்கை கலியிலென்பார் - எங்கும்

நச்சூறும் உலக நலம் கெடும் நிலையில் (ஒலியே)

சரணங்கள்

உலையென உணர்வுகள் கொந்தளிக்க,

உலகெல்லாம் சுயநலப் புயலடிக்க,

மலை இமயமே மானிடரால் உருக,

மாசில்லாத் தன்மையை மனதில் நிலைநிறுத்த (ஒலியே)

களைகள் மண்டிய காடெனினும் - மனிதன்

கைப்படும் ஆயுதம் இறைநாமம்!

எளியோர்க்குமே உதவும் மந்திரம் அது;

எப்பொழுதும் ஜபிப்போம் இறை நாமமே! (ஒலியே)

## எழுந்தருள் கங்கையே!

*இராகம்: இராகமாலிகை* *தாளம்: ஆதி*

பாகீஸ்வரி

எண்ணத்திலும் என் செயல்

வண்ணத்திலும், என்னுள்

எழுந்தருள் தூய - எழில்

கங்கையே நீ!

சரணங்கள்

புண்ணியப் புனல் உன்னைப்

புனைந்தான் நான்முகன்;

நண்ணித் தொழுது நின்றாய்

நாராயணன் தாள்கள்!

எண்ணற்கரிய மாதவங்கள்

இயற்றவும் பகீரதன்,

மண்ணில் மானுடத்தின்

மாசுகள் நீக்க வந்தாய்! 1

சிவரஞ்சனி

பொங்கி வரும் பிரளயம்

பூதலம் தாங்காதென

சங்கரன் சிகை விரித்தான்

சாந்தம் துளிர்க்க உன்னுள்;

துங்க மா இமயத்தில்

துள்ளி நீ வீழ்ந்தெழுந்து

புங்கமுனி ஏழ்வரையும்

பணிந்து நீள்வழி நடத்தாய்! 2

சிம்மேந்திர மத்யமம்

நந்தப் பிரயாகும் நீ - மா

ருத்ரப் பிரயாகும் நீ!

எந்தப் பெயரானாலும்

இறையும் தெய்வீகம் நீ!

சிந்தை நெகிழ்ந்து உன்னுள்

சேவித்து மூழ்குவோர்தம்

முந்தை வினை தீர்ப்பாய்;

விந்தை மாமருந்தே நீ! 3

சிந்து பைரவி

புனிதத்திலும் புனிதம்

பூத்த நதி உன்னையே,

மனிதத்தின் மதியீனம்

மாசொழுக வைத்தாலும்,

எனதுயிர்ப் புகல் நீயே,

எழுவாய் இளகங்கையே!

உனதருள் வேண்டியே

இறைஞ்சுகிறேன் எந்நாளும்! 4



## ஸ்ரீ சக்கரம்!

*இராகம்: இராகமாலிகை*

ஸ்ரீசக்கரம் ஈந்தருளும் சக்திப் பிரவாகமே
இவ்வற்புத ஞாலத்தின் ஜீவாதாரம்!
ஸ்ரீசக்கரம் ஈந்தருளும் பிராணப் பெருவெள்ளமே
இச்சக உயிர்காக்கும் அன்புச் சாகரம்! 1

விதை முளைத்தே வளரும், பூமுகைகள் மலரும்;
இயற்கையில் எங்குமே வளர்ச்சிப் பரிணாமம்!
புதையலெனத் துயிலும் மனித ஆற்றல்களும்
விழிமலர்ந்து வளரும், இயற்கை லயம் இணைய! 2

இயங்கும் சக்கரங்களே சக்தி மையங்களாய்
ஏற்ற இடம் அமர்ந்தன ஊனுடல் சிறைகளுள்;
பாங்காய்ச் செயலாற்ற நல்லாரோக்கியம்,
பற்றியே அவை பரவெளிச் சக்திதனை! 3

அண்டவெளி ஆற்றலின் அணுத்துகள்கள் பல
தண்டுவடத்தின் கீழ் தலை வைத்துப் படுத்ததென
குண்டலினிச் சக்திகள் குவலய மனிதருள்!
உண்டு பல யோகங்களும் உறக்கம் கலைந்தெழ! 4

பாலமாய் அமைந்தன பற்பல யோகங்கள்,
பட்டறிவால் உயிர்கள் பக்குவமாய்க் கனிய!
மூலத்திலே வீழும் முயற்சிகள் யாவுமே,
முக்தி நிலை கூட்டும், உற்ற வழிகாட்டி! 5

சிவம் எனும் அன்பே ஸ்ரீசக்கரம்!
சின்மய ரூபமே ஸ்ரீசக்கரம்!
பவவினை தீர்க்கும் ஸ்ரீசக்கரம்!
பணிந்திடுவோம் என்றும் ஸ்ரீசக்கரம்! 6



## ஏற்றிப் புகழ்!

*இராகம்: ரீதிகௌள* *தாளம்: திருபுடை*

ஏற்றிப் புகழ் மனமே

இறைவனை என்றென்றும் நீ!

**சரணங்கள்**

ஏற்றிப் புகழ்ந்திருக்க ஓர்

எல்லையில்லாதவனை அன்பில்,

போற்றற்குரிய பேருணர்வின்

புனிதமொன்று இழையும் உன்னுள்;

ஆற்றல் பெருகும் பேரருளாய்,

அமைதியே தவழும் நிறைவாய்! (ஏற்றிப்)

மாற்றமில்லாப் பேருண்மை அவன்

மா ஞாலப் பெருவெளியில்;

போற்றுதல் ஏற்பான் எனினும்

பொங்கும் கருணை வடிவினனாய்,

ஏற்றருளும் பூரணன் இனியும் எய்த

ஏதுமுண்டோ நம் போற்றுதலில்! (ஏற்றிப்)

## வாகனம்

*இராகம்: ஹம்ஸத்வனி* *தாளம்: ஆதி*

ஊனுடலே இறை வாகனம்

எப்பிறவியிலும் என்ஞான்றும்!

அநுபல்லவி

வான் பறக்கும் கருடன்

விஷ்ணுவின் வாகனம்;

ஆனை முகனுக்கோ

மூஷிகம் வாகனம்! (ஊனுடலே)

சரணம்

ஷண்முகம் அமர்வது

மாமயில் வாகனம்;

சங்கரன் அமர்வது

ரிஷப வாகனம்!

எண்ணிலாப் பிறவிதனில் - நாம்

எடுக்கும் மெய் யாதெனினும்

ஏறி அமர்ந்திடுவான்

இறையே உள்ளும் புறமும்! (ஊனுடலே)



## ஓம் எனும்...

*இராகம்: ஹிந்தோளம்* *தாளம்: ஆதி*

ஓம் எனும் மந்திரத்தால்
உள்ளத்தைக் கடைந்திடுவோம்;
உள்ளுறை இறைவனும்
எழுந்தே அருள்வான்!

அநுபல்லவி

நாம் வணங்கும் தெய்வ
நாமங்கள் யாவுமே
நலமருள் மந்திரங்கள்;
நாளும் உரைத்திருப்போம்! (ஓம்)

சரணங்கள்

பருகிடும் பாலினுள்
நெய் போலும் ஒளிந்து,
விறகினுள் உறைந்திட்ட
தீ போலும் மறைந்து,

அருட் கனலாய் ஒளிர்

அகம் உறங்கும் இறையை

உரைத்திடும் ஜபத்தினால்

துயிலெழச் செய்குவோம்! (ஓம்)

விக்ன விநாயகா!

வேல்முருகா, குகா!

முக்கண்ணனே, சிவா!

மோகன ஸ்ரீரங்கா!

பக்தவத்சலா,

பாலகோபாலா!

சக்ரபாணியே

சாரங்கனே, கண்ணா!

ஹரே இராம

இராம இராமா!

ஹரே கிருஷ்ண

கிருஷ்ண கிருஷ்ணா!

ஓம்... ஓம்...

நமச்சிவாய!

ஓம்... நமோ

நாராயணாய! (ஓம்)



## ஸ்ரீ சத்குருவைப் பணிவோம்!

*இராகம்: கல்யாண வசந்தம்* *தாளம்: ஆதி*

ஓம் குருதேவரைப் பணிவோம்!

பேரருளாளரைப் பணிவோம்!

ஓம் பரமஹம்ஸரைப் பணிவோம்!

ஸ்ரீ இராமகிருஷ்ணரைப் பணிவோம்!

பல்லவி

சன்னதியில் அமர்ந்து சங்கீர்த்தனம் செய்தே

ஸ்ரீ சத்குருவைப் பணிவோம் நாம்!

அநுபல்லவி

பொன்னடி போற்றிப் புகலெனச் சரணடைந்தே

இன்னருள் வேண்டுவோம், இதயம் நெகிழ்ந்தே!

(சன்னிதியில்)

சரணங்கள்

எந்நேரமும் இறைஞ்சி
கண்ணீரில் கரைந்துருகி
அன்னை மாகாளியை
அனுபவமாய் உணர்ந்தோன்
சொன்னதெல்லாம் அரிய
பொன்மொழிகள், நன்னெறிகள்;
உன்னதமே எய்த
உதவும் அருட்கரங்கள்! (சன்னதியில்)

பார் புகழும் மகான்
பார்வையொன்றால் அருள
காரிருளும் அகலும்
கடைத்தேறும் வழி புலரும்;
ஆரா அமுதமாய்
அலைகடலாய்ப் பெருகும்
மாறாப் பேரன்பில்
மானிடமே ஒன்றும்! (சன்னதியில்)





## ஸ்ரீ ரமணர்

*இராகம்: பந்துவராளி* *தாளம்: ஆதி*

மாமுனி ஸ்ரீ ரமணர்
தாள் பணிவோம் நாம்
மௌனத்தில் உபதேசம்
செய்தருளிய மகான் (மாமுனி)

அநுபல்லவி

ஆழ்மனம் ஆய்ந்தறிந்து
அண்ணாமலையான் நிழலில்,
நானெனும் வேர் களைந்து
ஞானப் பழமாய் நின்ற (மாமுனி)

சரணங்கள்

உள்முகத் தேடலே
உண்மை அறியும் யோகம்;
ஊன்றிச் செய் தியானத்தில்
ஓர்ந்திடலாம் மூலம்!

பன்முகம் கொண்ட
ஆத்ம விசாரம் செய்யப்
பக்தியை, சிரத்தையை
போதித்த சத்குருவாம் (மாமுனி)

இதயக் குகையினுள்
மேற்கொள்ளும் ஓர் பயணம்,
இடைவிடாமல் செய்யும்
இமயமலைப் பயணம்!
புதையலாய் அது நல்கும்
பேரமைதியும் ஞானமும்
அடைந்திட அருள் செய்து
உதவும் மகரிஷியாம் (மாமுனி)





## ஆரோவில்

ஊரென்று நினைத்தங்கு

உலாச்சென்றேன் ஆர்வமாய்!

பார்வை எங்கும் பூக்குவியல்,

பரிவுத்தாய் விழித் தழுவல்!

கார்வானில் பூக்கும் வில்

கட்டியணைத்த ஆரோவில்! 1

பொன்னொளிர் நிலாக் கோளம்

புவியோர் தியான நிலைக்களம்!

அன்னை உறை ஆலயத்தின்

அமுதச் சுனை நலம் பொழிய

இன்னருளாய் இன்ப நிலை

எய்திடலாம் அன்பரெல்லாம்! 2

கண்ணகல் வையகமே
　　கை கோர்க்கும் வைபவத்தை
மண்ணிலிங்கு நிகழ்த்திடுவோர்
　　மானிடத்தை உயர்த்திடுவார்!
எண்ணத்தில் நல்லோர் நாம்
　　ஏற்றதெல்லாம் செய்திருப்போம்! 3

நிறைவான நிம்மதியும்
　　நற்பண்பும் நுண்மதியும்
குறைவில்லாச் செல்வ நிதியாம்
　　கூட்டுறவின் வெகுமதிகள்!
மறையூறும் உட்சுருதியே
　　மனித நேயப் பெருநிதியாம்! 4

விஷ்வ நேர்த்தி வாமனமாய்
　　இத்தலம் அண்மயவும்,
புஷ்ப இதழ்ப் புன்னகைகள்
　　நட்புப் பாலம் நிறுவவும்,
நிஷ்டை ஆழ் தாய் அவளை
　　நித்தம் வேண்டிப் பணிந்திடுவோம்! 5

## வேரினைக் கண்டறிவாய்!

*இராகம்: யமுனா கல்யாணி* *தாளம்: ஆதி*

எண்ணத்தின் வேரினைக் கண்டறிவாய் நீ
இடைவிடா ஆழ் தியானத்திலே, என் மனமே!

அநுபல்லவி

வண்ணத் திருநாமம் ஒன்றினை நீ
வாயார மனதாரச் சொல்லியும், நினைந்தும் (எண்ணத்தின்)

சரணங்கள்

பண்ணும் பயணத்தின் பாதை உள்நோக்க
பையத்தான் முன்னேற்றம் படிப்படியாய் இருக்கும்;
திண்ணம் அடைந்திடலாம் தெய்வத்தின் சன்னிதியை
'நான்' இல்லா மௌனத்துள், மெய்ஞ்ஞான விழி பெற்று!
(எண்ணத்தின்)

விண்ணெட்டும் வண்ணம் நம்பிக்கை கொண்டே
வேத நெறிமுறைகள் பின்பற்றுவாய் நீ;
உண்ணத் தெவிட்டாத நாமம் சுவைத்தென்றும்
ஓதியுணர்ந்து உண்மையுள் உறங்கிடுவாய் நீ!
(எண்ணத்தின்)

# முற்பிறவி வாசனைகள்!

வலிமை மிகுந்தே
உயிரினுள் ஊடுறுவும்
வாழ்க்கை வேர்களோ
முற்பிறவி வாசனைகள்?

அநுபல்லவி

நலமருள் இறைவன்
நாமஸ்மரணம் ஊறும்
ஞாபகப் பதிவெனில்
நன்மைகளே விளையும்! (வலிமை)

சரணம்

பண்ணும் நற்செயலெல்லாம்
புண்ணியமாய்ப் பூக்க
வண்ண நல்வாசனைகள் - அற
வழி நடத்திச் செல்லும்!
எண்ணும் எண்ணமெல்லாம்
இறையையே வலம் வர
நண்ணும் இன்னல்களும்
நலிவடைந்தே வீழும்!
மண்ணில் வாழ்க்கையுமே
மாதவமாய்ச் சிறக்க
திண்ணம் அடைந்திடலாம்
தெய்வ தரிசனமே! (வலிமை)

## ஓர் வேகமே...

*இராகம்: அமிர்தவர்ஷிணி* *தாளம்: ஆதி*

ஓர் வேகமே வேண்டும் தூயதாய் என்னுள்
வெற்றுச் சடங்குகளுக்கப்பால் ஏகி - நான்
விள்ளர்க்கரியோன் அருட் பேரன்பில்தோய!

அநுப்பல்லவி

ஓர் தாகமே வேண்டும் தணியாது உய்ருள்
உற்ற நல்வழிகாட்டி அருள் - எனக்கேற்ற
சத்குருவின் தாள்கள் சரணடைந்தே வாழ (ஓர்)

சரணம்

கார்மேகமாய் ஊறுகள்
சூழாதிருக்க வேணும்;
கட்டுக்களும் அவிழ்ந்தே
இகவாழ்க்கையின் - உயர்
இலட்சியம் நோக்கி நான்
விரைந்திட வேண்டும்;
வேராகும் முந்தைய
வினைப் பயன்கள் ஏதும்
எதிர்வரும் பிறவிகளில்
தொடரா வண்ணம்,
இறையருட் பார்வையே
படவேண்டும் என்மேல்! (ஓர்)



# நாமாவளி சொல்லி!

*இராகம்: கரகரப்ரியா* *தாளம்: ஆதி*

பயணக் களைப்பின்றி

பயணிக்கப் பழகு நீ,

பண்ணூறும் பற்பல

நாமாவளி சொல்லி!

அநுபல்லவி

வியனுலக வாழ்வினை

இனிய உலா ஆக்க

வேறோர் வழியேதும்

இல்லை என்றே அறி! (பயணக்)

சரணங்கள்

சயனித்திருக்கும் கோலம்

கொண்டிருப்போன் உயிருள்

சச்சிதானந்தமாய்

எங்குமே ஆடி நிற்க,

பயணம் உயிர்களுக்கே

பிறவி பிறவிகளாய்,

பாவ புண்ய வினைப்

பயன்களின் விளைவாய்! (பயணக்)

பைய நடந்தாலும்

பரமசுகம் அளிக்கும்

பக்திமணம் கமழ்

பசுஞ்சோலை வழிசெல்லு;

எய்திடுவாய் எளிதாய்

இறைவனின் சன்னதி

எப்போதும் ஜபித்திருந்தே

ஏழிசை நாமாவளி! (பயணக்)





## பக்திப் பாதை!

*இராகம்: ஹிந்துஸ்தானி கானடா* *தாளம்: ஆதி*

யுகம் எதுவாயினும்

உய்ய உயிர்க்குதவும்

உகந்த நற்பாதை

நெக்குருகும் பக்தியே!

அநுபல்லவி

அகமுருகும் தூய

அன்பிருந்தால் போதும்,

புகலருளும் மலர்த்தாள்

பூத்திடுமே இயல்பாய்! (யுகம்)

சரணங்கள்

நறுமண மலர் கொண்டும்,

நாதமிசைத்திருந்தும்,

அரிய உபாசனையில்

அகமகிழ்ந்தோர் பலர்;

உறவு கொண்டால் போதும்

உள்ளத்தின் இயல்புக்கேற்ப,

இறை தரிசனமே

எய்திடலாம் எளிதாய்! (யுகம்)

கிருத யுகம் கண்ட

பக்த பிரஹ்லாதன் போல்,

திரேதாயுகம் கண்ட

பக்த ஸ்ரீ அனுமன் போல்,

துவாபர யுகம் கண்ட

கோபியர் போலவும்,

தூய அன்பின் பாதை

தொடர்ந்தே சென்றிடலாம்! (யுகம்)



## அன்பனாய் ஆகி விடு!

*இராகம்: த்விஜாவந்தி* *தாளம்: ஆதி*

நான் எனும் உணர்வினை
நலமுறச் செய்யவே,
ஆண்டவனின் அன்பனாய்
ஆகிவிடு என் மனமே!

அநுபல்லவி

தான் எனும் அகந்தை
தலை தூக்கிடா வண்ணம்
வீண் எண்ண அலைகளை
விலக்கிடுவாய் மனமே! (நான்)

சரணம்

வான் உயர்ந்து நின்றாலும்
வலிமையில், திறமையில்,
நோன்பிருந்தே அடைந்தாலும்
நற்பலன்கள் பலவும்,
ஆன்மிகம் எடுத்தியம்பும்
அடக்கத்தின் மேன்மையை
அனுபவத்தில் உணர்ந்தாலன்றி,
அமைதி நலம் உனக்குண்டோ? (நான்)



## யக்ஞமாய்ச் செய்து விடு!

*இராகம்: ஹம்ஸநாதம்* *தாளம்: ஆதி*

எது செய்தாலும் நீ - ஓர்

யக்ஞமாய்ச் செய்துவிடு,

இச்சக நலம் நாடி

இறையருள் வேண்டியே!

அநுபல்லவி

விரதமிருந்தாலும் நீ,

வள்ளலென ஈந்தாலும்,

வேதம் பயின்றாலும்

ஞானம் பெற முயன்றே (எது)

சரணங்கள்

பதமலர் துதித்தாலும்,

பண்ணில் நாமம் ஜபித்தாலும்,

பிராணாயாமமும் - பல

யோகங்களும் செய்தாலும்,

இதமருள் ஆன்ம

விசாரங்களில் ஆழ்ந்தே

ஊழ் களையக் கேட்பாய்

உன்னையே அர்ப்பணித்தே (எது)

துரிதமாய் இயங்கியே

பணிகள் பல செய்தாலும்,

சோதனைகள் தாங்கியே

தோல்விகளில் துவண்டாலும்,

இரத சாரதியாய் அன்று

ஹரி மாதவன் மொழிந்த

பகவத் கீதையின்

பொருள் புரிந்தே (எது)



# பகவத் கீதை

*இராகம்: கீரவாணி* *தாளம்: திருபுடை*

ஓதி உணர்ந்திடுவோம் - பகவத்

கீதையை அனுதினம் நாம்!

அநுபல்லவி

வேத சாரமது, வைகுந்தன்

ஊட்டிய அருளமுது, பார்த்தனுக்கு! (ஓதி)

சரணம்

யோகம் பதினெட்டாய் விரிந்த

அறநெறிக் கடல் அதுவே,

மேகவண்ணன் தேர் அமர்ந்து - மொழிந்த

அருள் மழையால், போர்முனையில்;

தேகம், மனம், மொழியால் ஆற்றும்

செயல்களை, எப்பயனும் கருதாது

யாகமாய்ச் செய்துய்யவே உயிர்

ஓர் ஒப்பிலா உபதேசமது! (ஓதி)

# அசை போட

*இராகம்: மாண்டு* *தாளம்: ஆதி*



அசைபோடும் பசுவாய் நான்
ஆக விழைகின்றேன்,
இசைலோலன் யாதவன்
ஈந்த நற்கீதையை!

உயிருக்கு வழிகாட்டி
ஊட்டம் நல்கும் கீதை,
எய்த ஓர் இலக்கினை
ஏற்ற முறையில் விளக்கும்!

ஐயங்களைத் தீர்க்கும்,
ஒட்டும் ஊழ் துடைக்கும்;
ஓங்கி உலகளந்த - மா
ஔஷதத்தாள் சேர்க்கும்!

எஸ். வேம்பு

# காயத்ரி மந்திரம்

*இராகம்: ரேவதி* *தாளம்: ஆதி*

கற்றுணர்ந்திட வேண்டும்
காயத்ரி மந்திரத்தை
நெக்குருகும் பக்தியுடன்
நித்தமும் நாம்!

அநுபல்லவி

சொற்றொடரெல்லாம்
சித்த சுத்தி நல்கும்,
சக்தி நுண் கதிர்களாய்,
சூட்சும அலைகளாய்! (கற்றுணர்ந்திட)

சரணங்கள்

அண்டப் பெருவெளியின்
அசைவுகளிலே முழங்கும்
மந்தண ஒலியே
ஓம் பிரணவம்!
விண்டுரைக்க இயலாத
வேத மெய்ப்பொருளைக்
கொண்ட ஓங்காரமே
காயத்ரியில் உறையும்! (கற்றுணர்ந்திட)

உச்சரித்திருந்தால் போதும்
உள்விழி திறக்கும்!
அச்சமெல்லாம் ஒழிக்கும்
அரும்பெரும் உயிர்க்கவசம்!
இச்சைகளை விலக்கும்,
ஏற்றமெல்லாம் கொடுக்கும்,
சச்சிதானந்தமே அருளும்
ஒப்பிலா மந்திரம்! (கற்றுணர்ந்திட)

# நவகோள்கள் போற்றி!

*இராகம்: சிவரஞ்சனி* *தாளம்: ஆதி*

ஞாலத்தை வாழ வைக்கும்

ஞாயிறே போற்றி!

நேயத்தையே வளர்க்கும்

நன்னெஞ்சம் எமக்கருள்! 1

கோலமாய் வந்திடும்

குளிர் திங்களே போற்றி!

குவலயம் உறவாய் வாழக்

கோதில்லா அகம் அருள்! 2

சேமமே நல்கிடும்

செவ்வாயே போற்றி!

சீலமாய் வாழ - நற்

சிந்தையே எமக்கருள்! 3

பூமியின் நேயனே

புதனே போற்றி!

பொதுநலமே பேணும்

புனித மனம் அருள்! 4

வழித்துணையாய் வரும்

வியாழனே போற்றி!

வாய்மையில் தூய்மையில்

ஒளிர்மனம் எமக்கருள்! 5

வேண்டியவை அருளும்

வெள்ளியே போற்றி!

விதியினையே வெல்லும்

வைர நெஞ்சம் அருள்! 6

சாதகமாய்ச் சோதிக்கும்

சனியே போற்றி!

சக்திமிகு பேரன்புச்

சாந்தி தவழ் நெஞ்சருள்! 7

நாக தோஷம் முறிப்போய்

இராகு கேதுவே போற்றி!

நெக்குருகி இறைஞ்சுகின்றோம்

நிர்மல நெஞ்சருள்! 8

ஓம் என்றுரைத்து - உம்மை

வழிபடுகின்றோம்;

நன்மைகளே வழங்கி

நவகோள்களே, அருள்! 9

## ஆவினமே போற்றி!

*இராகம்: மோகனம்* *தாளம்: ஆதி*



அமுத கலசமேந்தும்

ஆவினமே போற்றி!

காமதேனு வம்ச

கோவினமே போற்றி!

அநுபல்லவி

மனித நலம் காக்கும்

புனித வடிவே போற்றி!

மாணடி மேனியெங்கும்

மலர்ந்தொளிர்வோய் போற்றி! (அமுத)

சரணம்

மாதவனை மேய்ப்பனாய்

அடைந்தோய் போற்றி!

யாதவகுலம் வளர்

ஐச்வர்யமே போற்றி!

கோதகற்றும் எம்முள் - உம்

அருட்கொடை யாவுமே!

குவலயம் வாழ்விக்கும்

கோமாதாவே போற்றி! (அமுத)



# அபிஷேகம்

*இராகம்: தர்மவதி* *தாளம்: ஆதி*

அபிஷேகம் கண்டிரு நீ மனமே!

அகத் தூய்மைக்கு உதவும் அது - இறைவனின்

அநுபல்லவி

சுபம் அருளும், ஆன்ம சுகம் அருளும்;

சோக இருள் அகலும், சூட்சும விழி மலரும்! (அபிஷேகம்)

சரணங்கள்

பால் அபிஷேகமும் - பற்பல

பழ அபிஷேகமும்

தேன் அபிஷேகமும் - பசுந்

தயிர் அபிஷேகமும்

பார்த்திருந்தால் போதும்

பரவசமே நல்கும்! - இள

நீர் அபிஷேகமும்

பன்னீர் அபிஷேகமும்,

நெய் அபிஷேகமும் - திரு
 நீர் அபிஷேகமும்
நிறைவு தரும் உனக்கே - மனமே!
 நிம்மதியும் அருளி! (அபிஷேகம்)

ஆலகால விஷமாய்
 ஆயிரம் பல பொருட்கள்
அகிலத்திலே உன்னைப்
 பாதித்திருக்க என்றும்
காலவரையின்றி
 கட்டுண்டு கிடக்கின்றாய், மனமே!
சீலமாய் நீ வளர
 சில பொழுதேனும்,
சிறையினின்றே மீள
 சில பொழுதேனும்
சேமம் அருள் அபிஷேகம்
 சிந்தையொன்றி நோக்குவாய் (அபிஷேகம்)



## சங்கீதம்!

*இராகம்: சாருகேசி* *தாளம்: ஆதி*

சுவரமெனும் அணிமணிகள்
பூண்டொளிர் மௌனமே
தெய்வீகப் பேரின்ப
ஏழிசைச் சங்கீதம்!

அநுபல்லவி

நவரசமும் பொழிந்தே
நாட்டிய நடையழகில்
உவகையில் நம்மை ஆழ்த்தும் - அதன்
ஓங்கார ஸ்வரூபம்! (சுவரமெனும்)

சரணம்

ஸகுணப் பிரம்மமே
ரிஷிகளில் ஒலித்தது,
கந்தர்வ இசையில்
மந்தண வேதமாய்!
பகலவன் ஒளியாகி,
தரணிவாழ் உயிருமாகி
நிர்க்குணப் பிரம்மமே - எங்கும்
ஸர்வமுமாய் நிறைந்தது!
(சுவரமெனும்)



# இசைப் பாடல்

*இராகம்: ஆபேரி* *தாளம்: ஆதி*

இராகங்கள் ஆலாபித்து நடக்க எழிலாய்
தாளங்கள் மௌனம் சாதிக்கும் அங்கு!

அநுபல்லவி

கீதங்கள் இறைவன் கீர்த்திகளை இசைக்க
கோலமாய் தாளங்கள் கொட்டி முழங்கும்! (இராகங்கள்)

சரணம்

சரணமாய்ப் பூத்திடும் சாகித்திய வரியொன்றை
நிரவல் செய்திருக்கும் நேர்த்திஸ்வரம் பலவும்;
பரவசமே துளிர்க்க பிரார்த்தனைகள் நடக்கும்;
பக்தியில் மெய்சிலிர்க்கும், நெக்குருகும் இசை கேட்க!

(இராகங்கள்)

## அருமருந்து

*இராகம்: மதுவந்தி* *தாளம்: ஆதி*

அருமருந்து நல்ல

சங்கீதமே என்றும்;

ஆத்ம சுகம் தந்து

ஆற்றும் எந்நோயையும்!

அநுபல்லவி

சுருதி நின்று அலை மோதும்

சிருங்கார இராகங்கள்

அரியதோர் இன்பத்தை

அறிமுகம் செய்திடும்! (அருமருந்து)

சரணம்

இறை அனுபவமும்

இதயத்துள் ஊறும்;

நிறைவும் நிம்மதியும்

நேர்த்தியாய் மலரும்!

கரைகாணாப் பேரின்பக்

கடலே முன் விரியும்!

காயகல்பமாய் அது

உதவும் ஆராவமுதம்! (அருமருந்து)

## கவலை இல்லையே!

*இராகம்: திலங்* *தாளம்: ஆதி*

கடலின் பிரதிநிதி ஓர் அலையே!

கடவுளின் பிரதிநிதி கற்சிலையே!

அநுபல்லவி

திடமான நம்பிக்கை மாமலையே - உன்

உடனிருக்க கவலையேதும் இல்லையே! (கடலின்)

சரணம்

எவ்வழியைக் கடைபிடித்தாலும் சரியே,

இறைவனை அடைவதற்கு நீயே!

அவ்வழி தொடரும் விடாமுயற்சியே

ஐயமின்றி வழங்கும் முழு வெற்றியே! (கடலின்)





## அன்பே திறவுகோல்!

*இராகம்: லதாங்கி* *தாளம்: ஆதி*

அன்பே திறவுகோல்
ஆன்மா ஒளிர் அறைக்கு!

அநுபல்லவி

இன்னமுத மொழியும்
ஈரமுடன் செயலும் இணை (அன்பே)

சரணங்கள்

உண்மைப் பேரறிவை
ஊட்டும் அனுபவங்கள்;
எண்ணும் மனவெளியில்
ஏற்றும் தீபச் சுடராம் (அன்பே)

ஐயுணர்வில் அறிவில்
ஒழுக்க நெறி உயர
ஓம்பும் தூய்மைக்கு
ஔடதமாய் உதவும் (அன்பே)

# மௌனம்!

மௌனமே அன்பொளிர்
மோகனம் என்றும்!
மொழிகள் அனைத்திலும்
மையம், மிக உன்னதம்! 1

மேன்மைக் குணநலன்கள்
மெய்யுருக்கும் உணர்வுகள்,
மூங்கில் மனத்தொழுக
முக்தியே நடை பழகும்! 2

மீட்டும் யாழ் உறங்கும்,
மிருதங்க லயம் உறங்கும்
மாமோனக் கவியரங்கு;
மனமொன்றிய தியானமங்கு! 3

ஔடதமே மௌனம்,
ஓம்புதற்கரிய விரதம்;
ஒப்புவமையில்லாத் தவம்
ஐம்புலன்களும் அடங்க! 4

ஏடு கொள்ளாச் சிறப்பு,
எடுத்தோத உள்விழிப்பு;
ஊறுகள் நீக்கும் நெருப்பு,
உயிர் உய்யத் தாள் திறப்பு! 5

ஈரம் ஊறும் நெஞ்சம் - அதில்
இறை அருளுக்கேது பஞ்சம்!
ஆத்ம நிறைவே விஞ்சும் - முழு
அமைதியே அங்கு துஞ்சும்! 6



## பிரார்த்தனை

*இராகம்: யமுனா கல்யாணி* *தாளம்: ஆதி*

பிரார்த்தனை என்பது ஆத்மாவில் பூக்கும்
பக்தி மணம் கமழ் பவழமல்லிகை!

அநுபல்லவி

வார்த்தை கடந்த நன்றி
வண்ண உணர்வுகளில் மிக
பூத்ததும் உதிர்ந்திடும், அது
புருஷோத்தமன் தாள்களில்! (பிரார்த்தனை)

சரணம்

ஈர்க்கும் பொருளை எல்லாம் - ஆசை
இதயம் விழைவதெல்லாம்,
காக்கும் இறைவனிடம்
கேட்டல் முறையன்று;
வாழ்க்கை நோன்பிருக்க
வண்ண மல்லிகை போல்,
ஏற்றருளக் கேட்கும்
எண்ணமொன்றே வேண்டும்! (பிரார்த்தனை)



# ஆலயம் தொழல்

*இராகம்: பாகீஸ்வரி* *தாளம்: ஆதி*

ஆலயம் தொழுதல் சாலவும் நன்றென
அனுபவம் சொல்லும் நல்லுபதேசம்!

அநுபல்லவி

சீல நற்தெய்வீகம் விழித்தெழவும்,
சஞ்சல மனதினில் சாத்வீகம் நிலவவும் (ஆலயம்)

சரணங்கள்

கோலமாய் வானெழும் கோபுரம் கண்டே
குவித்தால் உள்ளம், கோதுகள் அகலும்;
ஸ்தூலம் கடந்ததோர் சூட்சும உணர்வில்
தீஞ்சுவை ஊறும், தூய சுகம் மலரும்! (ஆலயம்)

சாற்றும் பூமாலையும், காட்டும் தூப தீபமும்
கேட்கும் மணியோசையும், சுவைக்கும் பிரசாதமும்
ஆற்றுப்படுத்தும் நன்கு ஐம்புலன்களையும்
ஐக்கிய உணர்வொன்றில் ஆழ்த்தியே நம்மை! (ஆலயம்)

# நம்பிக்கை!

*இராகம்: பூர்வி கல்யாணி* *தாளம்: ஆதி*

எண்ணியவை எண்ணியாங்கு நடைபெறும் - நம்

இடைவிடா முயற்சியில், இறையருளும் கூட!

அநுபல்லவி

பண்ணிய நல்வினைகள் புண்ணியமாய்ப் பூக்க,

பக்தியின் பலமே இடர்களை நீக்க (எண்ணியவை)

சரணம்

பல துளி பெருவெள்ளம் என்பதே கூற்று;

பற்றிடும் நம்பிக்கை சக்தியின் ஊற்று!

பலமுறை வீழ்ச்சியும் பைய நிகழ் ஏற்றமே!

ஐயமில்லா முயற்சியில் எய்துவோம் வெற்றியே!

(எண்ணியவை)



## தூய்மை!

*இராகம்: பெஹாக்* *தாளம்: ஆதி*

இதயக் கமலம் நம்மில்

தூயதெனில் - அதை

இறைவன் நிரப்புவான்

பேரருள் அமுதால்!

அநுபல்லவி

புதையல் செல்வங்கள்

பொதிந்திருக்கும் சுரங்கப்

பூட்டின் திறவுகோல்

போற்றும் தூய்மையே! (இதயக் கமலம்)

சரணம்

விதியினையும் வெல்லும்

வழிமுறையாய்த் தூய்மை;

வேத புராணங்களும்

வலியுறுத்தும் இவ்வுண்மை!

பதியவும் சரணங்கள்

பவித்திர நன்னெஞ்சில்,

பாதையும் புலனாகிப்

பக்தி யோகமே கூடும்!

(இதயக் கமலம்)

# நேர்மை

*இராகம்: வசந்தா* *தாளம்: ஆதி*

நேர்மை குணம் பழகு
வாழ்க்கையிலே நீ,
நினைவிலும் செயலிலும்
மொழியிலும் என்றுமே!

அநுபல்லவி

போர்க்கள வாழ்விது;
பூணும் ஓர் கவசமென
அரிய இப்பண்பே
ஆன்ம நலம் காக்கும்! (நேர்மை)

சரணங்கள்

கூர் போதாதெனினும்
அறிவில் திறமையில்
கோதுகள் இருந்தாலும் - உன்
குணநலன்களிலே,
வேறென வியாபிக்கும்
நேர்மை குணமொன்றே
வெற்றிகளை வழங்கும்
வாழ்க்கையிலே உனக்கு! (நேர்மை)

சுயநலமில்லாச்
சேவை தரும் நேர்மை;
தியான வழி நிற்கும்
உள்ளம் பெறும் நேர்மை;
நேய மிகு நெஞ்சின்
பக்தி தரும் நேர்மை;
ஞான விசாரமெல்லாம்
நல்கும் குணம் நேர்மை! (நேர்மை)

## நன்மையே நினை!

*இராகம்: மாயாமாளவகௌளை* *தாளம்: ஆதி*

நன்மையே நினை நீ, நன்னெஞ்சே!
அந்தரங்கத் தூய்மை அது நல்கும்.

அநுபல்லவி

நன்மையே நினைத்தென்றும்
நலமருள் சொல் மொழிவாய்,
மந்தமாருதம் போலும்
மாதுர்யமாய், இதமாய்! (நன்மையே)

சரணங்கள்

உண்மை நல்வழி அறிந்து
உலக நலம் விழைந்து,
நன்மைகளே விளையும்
நற்செயல்கள் ஊக்குவாய்!
தண்மலர் அடி போற்றி
தரும நெறிகள் பின்பற்றி
தாரணி வாழ்வினையே
தெய்வ வழிபாடாக்குவாய்! (நன்மையே)

தத்துவம் வலியுறுத்தும்
சத்வகுணம் அதன்
உத்தமக் கூறொன்று
உள்ளத்தின் தூய்மையே;
எத்தனை பழுதிலும்
எத்தனை சகதியிலும்
ஞாயிறை நோக்கும்
தாமரைபோல் வாழ்வாய்! (நன்மையே)

## விடாமுயற்சி!

*இராகம்: சாரமதி* *தாளம்: ஆதி*

முயற்சியிலே, விடாமுயற்சியிலே என்றும்
மூங்கிலே வேய்ங்குழலாகும் இன்னிசை பொழிய!

அநுபல்லவி

முயற்சியெல்லாம் ஒழுக்கப் பயிற்சிகளாய் மலர
ஓங்கிடும் தெய்வீகம் உலக மாந்தருள்! (முயற்சியிலே)

சரணங்கள்

வளர்ச்சியே நல்கும் முயற்சிகளே செய்ய
வாய்மையும், தூய்மையும் வழிநடத்த,
முதிர்ச்சியினைப் பெற முன்னேற்றமும் நிகழும்;
மூலாதார சக்தியே நம்முள் எழும்! (முயற்சியிலே)

இயற்கையுடன் இணைந்து செயல்படுவோமெனில்
எல்லா உயிர்களிலும் இறையினையே உணர்ந்து,
செயற்கரிய சாதனைகள் நிகழ்த்தும் வண்ணம்
சித்தமும் ஒளிர, உத்தமராய் வாழலாம் (முயற்சியிலே)

## நன்றியுணர்வு

*இராகம்: அடாணா* *தாளம்: ஆதி*

நன்றி உணர்வினை
நலமுற வைத்திருந்து
என்றும் நினைத்திருந்து
இயன்றதைச் செய், மனிதா!

அநுபல்லவி

எந்நன்றி கொன்றார்க்கும்
உய்வுண்டாம், உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகர்க்கு!
இதுவே குறள்! (நன்றி)

சரணங்கள்

தொன்று தொட்டே செய் நற்செயல்
தாய் தந்தையரை இரட்சித்தல்;
நன்றிக் கடன் யாவிலும்
முந்தி நிற்பது அதுவே!
எந்நிலை வந்தாலும்
இயலாமை என்றுரைத்து
தன்னலத்துள் ஆழாமல்
தார்மீகமே போற்று! (நன்றி)

வழிவழி வரும் நன்மைகளும்,
வாழ்க்கை வசதிகளும்,
உழைப்போர் பலர் சிந்தும்
வேர்வையின் விளைவுகளே!
மொழியாலும் செயலாலும்
நன்றி நவின்றே,
பிழையின்றி வாழ்ந்திடு,
பண்பில் ஒளிர்ந்திடு! (நன்றி)

## சத்வ குணம்

*இராகம்: சாமா* *தாளம்: ஆதி*

எதிலும் மிதம் பழகு,
சத்வ குணம் பழகு;
இதமுடன் நல்கும்
ஏற்றமெல்லாம் அவை!

அநுபல்லவி

விதம் விதமாய் வாழ்க்கை
வசதி பல்கும் உலகில்
அதிதீவிர ஆசையில் விளை
அழிவினை எதிர்கொள்ளாமல் (எதிலும்)

சரணங்கள்

சுருதி லயம் இணைந்த
இசையே சங்கீதம்;
சூட்சும நன்னெறிகள்
உடையது சாத்வீகம்!
இரதம் அமர்ந்தே கண்ணன்
இயம்பிய வழி ஏகி,
முறையாய் முதிர்ந்தே
மூலத்தில் ஒன்றவே (எதிலும்)

சாந்தமும் தூய்மையும்
இணைந்த உயர்குணம்;
சச்சிதானந்தம் நோக்கி
நடை பயிலும் குணம்! - அது
ஈந்திடும் நன்மைகள்
எய்திடவே நீயும்
இயன்றதெல்லாம் செய்வாய்
இன்னுயிர் உய்வாய்! (எதிலும்)

## சத்சங்கம்!

*இராகம்: மோகனம்* *தாளம்: ஆதி*

சத்சங்கமதில் இணைந்து

சாத்வீகமே பழக,

உத்தம குணங்களின்

உறைவிடமாவோம் நாம்!

அநுபல்லவி

சுற்றமும் சூழலும்

ஊட்டமாய் அமைந்திட

சௌலப்பியமே மலரும்

சீலமாய் ஒழுக நாம்! (சத்சங்கமதில்)

சரணம்

யுத்தகளம் இவ்வாழ்க்கை

எத்தனையோ பகைகள்;

அச்சுதன் கீதையும் - அங்கு

பட்சமாய்க் கேட்கும்!

பக்தர் குழாம் கூடி

பலமுடன் போராட,

சத்தியமும் தர்மமும்

வெற்றி வாகை சூடும்! (சத்சங்கமதில்)

# வேற்றுமையில் ஒற்றுமை!

*இராகம்: காபி* *தாளம்: ஆதி*

வில்லாக வளைந்து நிற்கும்
வண்ணங்களே, வானில்
வேற்றுமையிலும் ஒற்றுமை
விளங்கக் காட்சி தரும்!

அநுபல்லவி

சொல்கடந்த மொழியொன்றில்
சஞ்சரிக்கும் இராகங்கள் - ஓர்
சுருதி நின்று உயிர் ஈர்க்கும்
சுவரங்கள் மறைந்திருக்க (வில்லாக)

சரணம்

கல்லாகச் சமைந்திருக்கும்
கருணையின் வடிவழகும்
காயமதிலும் உறைந்திருக்கும்,
கடவுள் என்பார் அதை!
எல்லா நிலையிலும்,எங்கும்
ஒன்றே யாதுமாகும்!
நன்றாய் இதையறிந்தே - நாம்
நல்லுறவாய் இணைவோம்! (வில்லாக)

# அர்ப்பணிப்பு

*இராகம்: வசந்த பைரவி* *தாளம்: ஆதி*

ஆற்றல் எழும் ஊற்றொன்றே
அலர் அர்ப்பணிப்பு - நீ
ஆற்றிடுவாய் பணிகள் - முழு
அர்ப்பணிப்பாய் உளம் நெகிழ!

சரணங்கள்

வீற்று உன்னுள் ஒளிரும்
விள்ளர்க்கரியோன் அருள்
ஊற்றுக்கண் விழித்திட
உழைத்தலே உன் பணி - நீ
ஆற்றிடும் பணிகளிலே
அர்ப்பணிப்பாய் உன்னை நீ!
ஏற்ற பலன்களும்
எய்துவாய் இயல்பாய்! (ஆற்றல்)

நோக்கம் உயர்வாக
நோற்றலே வாழ்வாக,
ஊக்கம் வலிவாக
உள்ளுறுதி நிலையாக,
பூக்கும் ஓர் உந்துதலில்
புரிவாய் அரும்பணி நீ;
ஆக்கப் பணிகளிலே
அர்ப்பணிப்பாய் உன்னை நீ! (ஆற்றல்)

## சக்தி மலர்தல்

*இராகம்: நாட்டைக் குறிஞ்சி* *தாளம்: ஆதி*

சராசரியானாலும் சாதனை படைத்திடலாம்

விடாமுயற்சியினால் வெற்றி கண்டே நீயும்!

அநுபல்லவி

பராசக்தியே உன்னுள்ளும்

படுத்தே துயில்கின்றாள்;

பையத்தான் எனினும்

விழிமலர்வாள் திண்ணம்! (சராசரி)

சரணம்

பல வடிவில் ஒளிர்

வண்ண மலர்களும்

பரமானந்தப் பேரிறை

உதிர்க்கும் புன்சிரிப்பே!

துளபமாய்த் தூய

உளம் சமைந்தால் உன்னில்

சுவரமொளிர் இசைபோலும்

சுடர்ஞானம் ஒளிரும்! (சராசரி)

## உன்னையே

*இராகம்: வாசந்தி* *தாளம்: ஆதி*

உன்னையே நீ பார்க்கப் பழகு
ஒவ்வொருவரிலும் இவ்வுலகினிலே!

அநுபல்லவி

தன்னலம் ஏகும், தயை பிறக்கும் உயிர்மேல்,
தான் என்ற ஆணவமும் தலைமறைவாகும்! (உன்னையே)

சரணம்

அன்னியம் என்பதேதும்
அவனியில் இல்லை என
அத்வைதம் சொல்லும் உண்மை
ஆழ உணர்ந்தே,
இன்னல்கள் போக்கு - உன்
ஈர நெஞ்சம் இயங்க;
ஏழிசை அமைதியும் - உன்
வாழ்க்கையில் நிலவும்! (உன்னையே)



## வாழ வேண்டாமோ?

*இராகம்: ஆபோகி* *தாளம்: ஆதி*

உயிர் தரித்திருந்தால் போதுமோ - உலகில்
உன்னதமாய் வாழ வேண்டாமோ நீ?

அநுபல்லவி

உயர் குறிக்கோள் ஒன்று
விண்மீன் போலவும்,
ஒளிர்ந்திட வேண்டாமோ - உன்
எண்ணத்திலே என்றும்? (உயிர்)

சரணங்கள்

புலரும் காலைப்
பொழுதினில் இயற்கைபோல்
புத்துணர்வுடன் இயங்கி
பொதுநலத்திற்கு உழைத்தலும்,
தளரா உறுதியில் - செய்
தாயன்புச் சேவையும்
அற்புதங்கள் நிகழ்த்தும்
அரிய தவங்களன்றோ! (உயிர்)

ஓம்பும் தூய்மையே
ஒப்பிலா நன்மை செய்
உத்திகளாய் உதவி - உன்
சக்திகளை எழுப்பும்;
மாண்பு மிகுந்தோனாய்
மலர்ந்திடவும் நீ
ஆன்மை தரிசனமே
அடையவும் இயலும்! (உயிர்)

# பெண்மை!

*இராகம்: ஹரிகாம்போதி* *தாளம்: ஆதி*

ஆண் பெண் இருபாலும்
பூரணத்தின் இருகூறு - எனினும்
அதர்மங்கள் நிகழும்
அழுக்காறாய் இவ்வுலகில்!

அநுபல்லவி

ஊன் உயிராய் இயங்கி,
ஒப்புரவாய் ஒழுகி,
நற்கருமங்கள் ஆற்ற
இஞ்ஞாலம் வரும் மக்களாம் (ஆண்)

சரணம்

தூண் எனத் தாங்கும்
தூய அன்பே தாய்மை;
தொல்லுலகில் இத்தூய்மை
துயர் படலாகுமோ?
நாண் இழந்த வில்லாய்,
நாதமிழந்த வீணையாய்
நலிவு காணலாகுமோ,
நனிசிறந்த பெண்மையும்?
நஞ்சில் மாயலாகுமோ
பிஞ்சுப் பெண் உயிர்களும்? (ஆண்)

# அன்னையின் அறிமுகம்!

*இராகம்: அமிர்தவர்ஷிணி* *தாளம்: ஆதி*

அன்பு முகம் ஒன்றே அறிமுகம் இவ்வுலகில்
உதிக்கின்ற போதினில் எவ்வுயிர்க்கும்!

அநுபல்லவி

நம்பும் முகம், அன்னையின் நலமருள் முகம்
ஞாபகம் வரும் எப்பிறவியிலும்! (அன்பு)

சரணங்கள்

எம்பிரான் பேரன்பே
எதிரொளிக்கும் முகம்;
இயற்கை வந்தங்கு
ஈந்துமோர் சுகம்!
கும்பிட எதிர்நிற்கும்
கோலமுகம் - அன்னை
அம்பிகையே அவள்
அடிபணிவோம்! (அன்பு)

தன்னிலொரு பாகமாய்
எண்ணும் நினைவிலே,
தாயிருப்பாள் அங்கு
தன்னை மறப்பாள்!
அன்னியம் என்பதேது
அவனி உயிர்களிலே!
இவ்வுண்மையின் அறிமுகமே
ஆத்ம சுகம் உயிர்க்கு! (அன்பு)

# செய்ந்நன்றி!

*இராகம்: ஹம்ஸத்வனி* *தாளம்: ஆதி*

உய்வில்லை செய்ந்நன்றி கொன்றோர்க்கு
இதுவே குறளின் மெய்வாக்கு!

அநுபல்லவி

உய்வுண்டாம் இவ்வுலகில் - மற்ற
அறநெறி பிறழ்வோர்க்கெல்லாம்! (உய்வில்லை)

சரணங்கள்

மெய் வருந்தும் தாய்மைக்கு
மேதினிபோல் பொறுமை;
பெய்யும் அன்பு மழைக்கு
ஏதுமுண்டோ உவமை!
வைய வாழ்க்கைக்கே - பேர்
ஆதாரம் அவள் செயல்கள்;
செய்ந்நன்றி கொல்வதோ - அவள்
சொந்த மக்கட் செல்வங்களே! (உய்வில்லை)

இயற்கை விளை முதுமைக்கு
இருக்கும் தனி இல்லங்கள்
செயற்கைத் துறவறங்களாய்க் கீழ்
சரிந்ததால் நல்லறங்கள்!
பயன் கருதாச் செயல்களுக்கே - நல்கும்
பரிசுகளோ அவைகள்!
முயன்றே செய்ந்நன்றியை
முகம் மலர வைப்போமோ! (உய்வில்லை)

## சௌக்கியம்!

*இராகம்: சௌராஷ்ட்ரம்* *தாளம்: ஆதி*

சௌக்கியமதை நோக்கமெனக் கொண்ட
சாந்த நிலை வேண்டும் நம் மனதில்!

அநுபல்லவி

நீக்கமற நிறைந்திருக்கும் இறைவன்
நினைவு என்றும் வேண்டும் நன்னெஞ்சில்!

(சௌக்கியமதை)

சரணங்கள்

பூக்கும் சொல்லெல்லாம்
புனிதமாய் இனிமையாய்
வாக்கிலே வேண்டும்
வாழ்த்தும் நெஞ்சொலிகளாய்;
யாக்கை செய்யும் செயல்கள்
அனைத்திலுமே உலகின்
ஆக்கமே குறியாய்
ஆகிட வேண்டும்! (சௌக்கியமதை)

ஆர்க்கும் கடல் மனதின்
அலைகளெல்லாம் நம்மை
ஆன்ம சுகமொன்றில்
அமிழ வைக்கும் அந்த
ஈர்க்கும் பேரருளை
எப்பொழுதும் தொழுதே,
ஏற்றருளக் கேட்கும்
உயிர் நெகிழ்வே வேண்டும்! (சௌக்கியமதை)

# பேதம் ஏதுமில்லை!

*இராகம்: தேஷ்* *தாளம்: ஆதி*

பேதம் ஏதுமில்லை நம்முள் என்றே நினை

எங்கிருந்தாலும் இச்சகத்தில் நாம்!

அநுபல்லவி

யாதும் ஊரே யாவரும் கேளிர்

என்ற பேருண்மையை நன்கறிந்தே (பேதம்)

சரணங்கள்

சேதம் யாவுமே பேதமை வேர்களில்

செழித்த பகைகளின் தீய விளைவுகளே;

கோதுகள் களைந்தே கூடி வாழ்வோமெனில்

குவயலத்தோர் நாம் கோடி இன்பம் பெறலாம்! (பேதம்)

கூடுவிட்டேகும் உயிர் கூடுமிடம் அறியோம்;

கொண்டு செல்வதெல்லாம் கூட்டும் வினைப் பயன்கள்!

நாடி அடைந்திடுவோம் ஞால நலன்களையே,

நட்பில் கைகோர்த்து நம் வாழ்நாளெல்லாம்! (பேதம்)

# இராஜபாட்டை

*இராகம்: சுருட்டி* *தாளம்: ஆதி*

ஒற்றையடிப் பாதையல்ல

ஒழுகிடும் இல்வாழ்க்கை;

சுற்றம் சூழ நடந்திடும் ஓர்

அறநெறி இராஜபாட்டை!

அநுபல்லவி

பற்றி நிற்போர்க்கு உதவி

பார் நலம் பேணுவதால்,

பக்குவம் அடையவைக்கும்

பட்டறிவுப் பாதையது! (ஒற்றை)

சரணம்

நிற்கும் நிழல் சொந்தம் கொண்டு

விருப்பம் போல் வாழ்வதிலே

நெறியேது, குறியேது

நிம்மதியும் ஏது?

கற்க வேண்டும் கூட்டுறவு

காரிய சித்தி பெற

உறவுகள் வலிவாக்கி - வாழ்க்கை

ஊர்வலம் முறையாக்கி! (ஒற்றை)



## பார் நலம் காக்க

*இராகம்: ஷண்முகப்ரியா* *தாளம்: ஆதி*

ஓய்வு ஒழிவு இன்றி

ஊறுசெய் பொருட்களின்

உற்பத்திகள் உலகில்

நிகழ்ந்திருக்கலாமோ!

அநுபல்லவி

ஆய்வு செய்வோம் - நல்ல

வழிமுறைகள் கண்டறிவோம்;

பாரின் நலம் காக்க

யாவுமே செய்வோம்! (ஓய்வு)

சரணங்கள்

காய்ச்சலில் வையம்

வீழ்ந்து கொண்டிருக்க

கரியமலம் காற்றில்

மிகுந்து கொண்டேயிருக்க,

சூழ்ச்சி செய் தேசங்கள் - அணு
 ஆயுதங்கள் குவிக்க
சுபிட்சத்திற்கே உதவும்
 முயற்சிகள் செய்வோமோ! (ஓய்வு)

பசுமை வளமெல்லாம்
 அழிந்து கொண்டேயிருக்க,
பாசமும் நேசமும்
 உலர்ந்து கொண்டேயிருக்க,
விசையுடன் கலியும்
 முதிர்ந்து கொண்டேயிருக்க,
வேகமுடன் நாமே
 செயல்படுவோமோ! (ஓய்வு)



# மனித நேயம்

*இராகம்: கௌடமல்ஹார்* *தாளம்: ரூபகம்*

நேயமே, மனித நேயமே - இஞ்

ஞாலமெங்கிலும் மலரட்டுமே!

மணம் கமழ மலர்ந்தொளிரட்டுமே!

அநுபல்லவி

பாயும் நீரெனப் பாயந்திடும் அன்பே

பாலை மனங்களைப் பசுஞ்சோலைகளாக்குமே! (நேயமே)

சரணம்

ஓயும் உறுபகை, ஓங்கும் நல்லொற்றுமை;

மாயும் பல்வகை மருள்தரும் நோய்களும்!

தாயின் அன்பெனத் தழுவிடும் நேயமே

ஆரா அமுதமாய் அவனியை வாழ வைக்கும்! (நேயமே)



## உயிர் நேயம்

*இராகம்: மதுவந்தி* *தாளம்: ஆதி*

பழகு, என்றும் பழகு
பாங்குடன் உயிர் நேயம்;
அழகு, அது அழகு,
ஆக்கம் பெறும் இவ்வையம்! 1

ஒழுகு, இணைந்தொழுகு
இயற்கையெல்லாம் அணைத்து;
அழகு, அது அழகு,
ஆத்ம சுகம் நல்கும்! 2

இளகு, மனம் இளகு
அஹிம்சை குணம் மிளிர!
உலகு, இவ்வுலகு
ஊட்டமுற வளரும்! 3

முழங்கு, இதம் முழங்கு
மேவு நற்பேரன்பில்;
இயங்கு, ஈகை விளங்க
இச்சக உயிர் ஓம்பி! 4

சிறையில், உடற்சிறையில்
ஒடுங்கும் உயிர்களிலே
இறையோன், உள் உறைவான்
இவ்வுண்மையினை உணர்! 5

பரிவால், உயர் ஒப்புரவால்
பைந்தளிர் உயிர் செழிக்க,
உறவாய், அருள் நெறியாய்
வாழ்ந்திடு; இப்புவி சிறக்கும்! 6

# ஜீவகாருண்யம்!

*இராகம்: இராகமாலிகை* *தாளம்: ஆதி*

மோகனம்

வையக உயிர் அனைத்தும்
வாழ்க நீடூழி என
வாழ்த்தும் ஓர் நன்னெஞ்சம்
யாவர்க்குமே வேண்டும்!

அநுபல்லவி

செய்கைக்குள் ஒளிர் விளக்காம்
ஜீவ காருண்யமே - இஞ்
ஞாலத்தின் நலம் காக்கும்;
நன்மைகளை ஊக்கும்! (வையக)

சரணங்கள்

ஐயம் ஏதும் இல்லா
அஹிம்சையில் நம்பிக்கை
ஆன்ம நேயம் வளர்க்க
அனைவருக்கும் வேண்டும்!
பயிலும் கல்வியில்
பட்டறிவில், தொழிலில்
பல்லுயிர் ஓம்புதலே
பதியும் பண்பாக வேண்டும்! (வையக)

ஷண்முகப்ரியா

பிறர் நலம் பேணவே
நன்குழைத்தல் வேண்டும்;

பேராசைச் சுரண்டல்கள்

ஒழித்திடல் வேண்டும்!

உறவுகள் வலிவாக்கி

உதவிடல் வேண்டும்;

ஊறும் ஈவிரக்கம்

உளம் நிறைத்திட வேண்டும்! (வையக)

ஆனந்த பைரவி

அபயமாய் நாமிருக்க

இயற்கையின் துணை வேண்டும்;

ஆபத்தை விளைவிக்காச்

செயல்பாடுகள் வேண்டும்!

சுபிட்சமே நிலவும் வண்ணம்

சூழ்நிலையை அரவணைத்து

உபகாரமாய் வாழப்

பழகுதல் வேண்டும்! (வையக)

சிந்து பைரவி

வாடிய பயிர் கண்டு

வாடிய வள்ளலார்

வழியினில் நடக்க

விழைந்தே முயல,

தேடும் அனைத்துமே

தெய்வீக அருளாய்

கூடி வரும் திண்ணம்

குவலயத்தோர் வாழ்வில்! (வையக)



## எல்லை மீறினால்!

*இராகம்: ஹிந்தோளம்* *தாளம்: ஆதி*

எல்லை மீறினால் எதிலும்

எதிர்கொள்ளுவோம் பெரும்

அல்லல்களையும் பல

அவலங்களையும் நாம்!

அநுபல்லவி

அள்ளும் அழகு இயற்கை

கொள்ளையுண்டு கோலம் கெட,

வெள்ளமெனக் கடல் பொங்கி

வெகுண்டெழக் காண்கின்றோம்! (எல்லை)

சரணங்கள்

பல்லுயிர் ஓம்பும் - நற்

பண்பினையே துறந்து

பசுமைவளக் காடெல்லாம்

பாலை நிலமாக்குகின்றோம்!

மெல்ல மெல்லச் சூழலெங்கும்
மண்டிடக் கரியமலம்
மாசுகளால் உலகின்
வெப்ப நிலை கூட்டுகின்றோம்!
மாபெரும் இமயத்தையே
மண்ணில் சாய வீழ்த்துகின்றோம்! (எல்லை)

அண்டும் அபாயங்கள்
நன்கறிந்தாலும் - செய்
ஆய்வினில் தீர்வுகள்
கண்டறிந்தாலும்,
ஒன்றுபட்டே உலகோர்
செயல்படாவிடில் - வரும்
ஊழியைத் தவிர்க்கவும்
இயலுமோ - பேர்
அழிவினைத் தடுக்கவும்
இயலுமோ, நம்மால்? (எல்லை)



# சுருதி சேர்ப்போம்!

*இராகம்: மத்யமாவதி* *தாளம்: ரூபகம்*

சுருதி சேர்ப்போம் நாம், நலமருள்
பிரகிருதியுடன் இணைந்து வாழ!

அநுபல்லவி

கிருதியாய் இன்னிசையில் - பல
சரித்திரங்கள் படைப்போம்! (சுருதி)

சரணங்கள்

சத்தியம், சௌம்மியம் - எங்கும்
சாந்தமென இலங்கும்
உட்பொருளே கண்விழிக்க
ஓம் பிரணவம் உதயம்!
நித்தியமே இயல்பெனினும் - அது
நவநவமாய் மாறும்
சித்திரங்கள் தீட்டும் - அற்புத
சின்மயம் இஞ்ஞாலம்! (சுருதி)

மண்ணிலும், நீரிலும் - எங்கும்
விண்ணிலும், காற்றிலும்
நண்ணும் மலம் மிகவே
ஊழிப் பிரளயமே வரும்!
பண்ணும் செயல்களிலே - இனி
பரிசுத்தமே காப்போம்;
எண்ணத்திலே என்றும் நாம்
உயிர் நேயமே பழகி! (சுருதி)



## இசையென வாழ!

*இராகம்: பிருந்தாவனி* *தாளம்: ஆதி*

இச்சக வாழ்வினை
இன்னிசையாக்குமோர்
யுக்தியினைப் பயில்வோம்
எந்நிலையிலும் நாம்!

அநுபல்லவி

அச்சமில்லை, இனி
அச்சமே இல்லையென
சித்தம் நினைத்திடும்
சக்தியினைப் பெறுவோம்! (இச்சக)

சரணங்கள்

கற்றல்கள் யாவிலும்
இலட்சியங்கள் மிளிர
கவனமெல்லாம் குவிப்போம்
உற்ற சுருதியினில்;

வெற்றிகளைக் கூட்டும்
வைராக்கிய நடையினில்
நற்பணிகள் செய்யும்
நாதம் உபாசிப்போம்! (இச்சக)

சத்சங்கமே அமைப்போம்,
சாத்வீகமே வளர்க்கும்
நற்சூழலைச் சமைத்தே - இறை
நாமங்களே ஒலிப்போம்!
நெக்குருகித் துதிப்போம்
நாதஸ்வரூபனை
பக்தி செய்தே என்றும்
பாதம் சரணடைந்தே! (இச்சக)

நிறைந்தது





செல்வி எஸ். வேம்பு அவர்கள் 28-09-1929 அன்று சீர்காழியில் பிறந்தார். சென்னையில் பி.எஸ்.ஸி., (பௌதீகம்), பி.டி., பட்டங்களைப் பெற்று, 1955ல் அரசுப்பணியில் பள்ளி உதவி ஆசிரியராகச் சேர்ந்தார். 1960யிலிருந்து 1988ல் ஓய்வு பெறும்வரை பற்பல மாவட்டங்களில் உயர்நிலைப் பள்ளிகளிலும் மற்றும் ஆசிரியப் பயிற்சி நிறுவனங்களிலும் தலைமையாசிரியராகப் பணியாற்றினார். எம்.எட்., மற்றும் எம்.ஏ., (சமூகவியல்) பட்டங்களையும் பெற்றுள்ளார்.

சிறந்த நிர்வாகியாக இருந்தததோடு மாணவர்களின் சீரிய பண்புவளர்ச்சிக்கும், கல்வி முன்னேற்றத்திற்கும் உதவும் வகையில் தன் தனித் திறமைகளைப் பயன்படுத்தி உழைத்தவர். இலக்கியம், இசை, கலை, கைத்தொழில், விளையாட்டு, சமூகநலத்தொண்டு போன்றவற்றில் மிகுந்த ஈடுபாடு கொண்டு, ஆசிரியர்களையும் மாணவர்களையும் ஊக்குவித்து, விழா நிகழ்ச்சிகளையும், கண்காட்சிகளையும் சிறப்பாக நடத்தி, அனைவரது பாராட்டையும் பெற்றவர்.

மாணவர்களுக்காகவே இயற்றப்பட்டு பள்ளி மேடைகள் பன்முறையும் ஏறிய இவரது படைப்புகள் 'புதியதோர் உலகு செய்வோம்' என்ற தலைப்பில் நூலாக 1996ல் வெளி வந்தது. இவை மாணவமணிகளுக்கு என்றென்றும் பயன்படும் வகையில் தமிழகத்திலுள்ள பள்ளிகளுக்கு இலவசமாக விநியோகிக்கப்பட்டன.

'கடலைத்தேடும் பனித்துளி' என்னும் இவரது இசைக்கவிதை நூல் 1998ல் வெளி வந்தது. இந்நூல் பல இசைக்கலைஞர்களையும் சென்றடைந்து, அவர்கள் இசை நிகழ்ச்சிகளிலும் ஒலி நாடாக்களிலும் இவரது பாடல்கள் இடம் பெற்றன. பக்திச்சுவைமிகு 'நாத ஆலயம்' ஒலி நாடா 2000-ல் வெளியிடப்பட்டது குறிப்பிடத்தக்கது.

'புதையல்கள் துயிலெழக் கவிதைகள்' எனும் இவரது புதுக்கவிதை நூல் 2007ல் வெளிவந்தது.